# மலையமான்கள்





புலவர் சு. குப்புசாமி

# BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the book | MALAYAMANKAL |
| Author | Pulavar S, KUPPUSAMY |
| Language | Tamil |
| Edition | First., July, 1978 |
| Copyright holder | SEKAR PATHIPPAGAM |
| Paper Used | 11·6 kg. D.Cr. White Printing |
| Size of the Book | 18·x12·5 c.m. |
| Printing Points Used | 10pt |
| No. of Pages | 176 |
| No. of copies Printed | 1200 |
| Printer | LEIPZIG PRINTERS Madras–14 |
| Binding | Card Board Binding |
| **Price** | **R. 9-00** |
| Publisher | SEKAR PATHIPPAGAM Madras-83 |
| Subject | The History of Malayaman's Chiestains |
| Call Number | V 44113, A N 78 |

# மலையமான்கள்



பாகூர்
புலவர் சு. குப்புசாமி

சேகர் பதிப்பகம்
66, பெரிய தெரு
எம்.ஜி.ஆர். நகர்
சென்னை-600083

## நூல் ஆக்கம்


| | |
|---|---|
| ஆசிரியர் : | புலவர் சு. குப்புசாமி |
| முகப்பு ஓவியம் : | கவிஞர் அமுதோன் |
| உட்புறப் படங்கள் : | அமுதோன், கங்கன் |
| பிளாக் செய்தவர் : | தணிகாசலம் |
| நூல் அச்சிட்டோர் : | லீப்ஸிக் பிரிண்டர்ஸ் |
| படங்கள் அச்சிட்டோர் : | ஜீவன் பிரஸ் |
| அச்சுக்கோப்பு : | டி. கே. ராமச்சந்திரன் |
| பிழை திருத்தம் : | வெ. சுந்தரம் |
| பைண்டிங் : | இராமநாதன் |
| பதிப்பாளர் : | வெள்ளையாம்பட்டு சுந்தரம் |

# அணிந்துரை

திருக்குறள்மணி
க. த. திருநாவுக்கரசு,
M.A.,M.Litt.,

இணைப்பேராசிரியர்,
உலகத்தமிழாராய்ச்சி
நிறுவனம், சென்னை

ஒரு நாட்டின் வரலாற்றை உருவாக்கும் சக்திகள் பல. அவற்றுள் குறுநில மன்னர் எனும் சக்தி, பேராற்றல் வாய்ந்ததாகும். பல பேரரசுகளின் எழுச்சிக்கும் வீழ்ச்சிக்கும் குறுநில மன்னர்கள் காரணமாக அமைந்து உள்ளதை வரலாறு பேசுகிறது!

சங்க காலம் முதல் தமிழகத்தில் சிறப்புற்று விளங்கிய குறுநில மன்னர் குடிகள் பலவாகும். அவற்றுள் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட தொன்மைச் சிறப்பு வாய்ந்த சிற்றரசர் மரபுகள் சிலவேயாகும். அவை அதியமான்மரபு, மலையமான் மரபு, ஆய்க்குல மன்னர் மரபு என்பனவாகும்.

மூவேந்தர்களின் வரலாற்றையே முறையாகவும், முழுமையாகவும் எழுதாத நாம், இக்குறுநில மன்னர் வரலாற்றைச் செம்மையான முறையில் தனி நூலாக இதுவரை எழுத முயலாததில் வியப்பு இல்லை!

மறுமலர்ச்சி யுற்றிருக்கும் தமிழகத்து இளைஞர்கள் சிந்தனைத் தெளிவும் செயல் திறனும் வாய்ந்தவர்கள். அவர்கள் இந்தக் குறையைப்போக்க-நீக்க-முனைந்து நிற்கின்றனர். புதுவை மாநிலத்தைச் சேர்ந்த பாகூர் புலவர் திரு. சு. குப்புசாமி அவர்கள் இந்த வரலாற்றுப் பணியில் முன்னணியில் நிற்கும் வீறுமிக்க இளைஞராவார். அவருடைய ஆழ்ந்த தமிழ்ப்புலமையும், கல்வெட்டு அறிவும், தொல்பொருள் ஆய்வுக் களப் பணியில் பெற்றுள்ள அனுபவமும் ஒன்றாக இணைந்து, அவருடைய படைப்புகளில் தனித்தன்மைவாய்ந்த வரலாற்று உணர்வாகப் பொங்கி வழிகின்றன.

இன்றைய திருக்கோயிலூர் வட்டத்தில், சங்க காலம் முதல் சோழப் பேரரசின் வீழ்ச்சி வரையில் பேரும் புகழும் பெற்று "மலையமான்கள், சேதிராயர், மிலாடுடை (மலை நாடுடை)யார்" எனும் குடிப் பெயரோடு மாவீரர்களாக விளங்கிய சிற்றரசர் குடியின் வரலாற்றை இயன்றவரையில் முழுமையாக விரித்துரைக்கும் முதல் படைப்பே இம் 'மலையமான்கள்' எனும் நூலாகும்.

மாண்புமிகு மலையமான்களின் வரலாற்றை ஐந்து காலக் கட்டங்களாக (சங்க காலம், பல்லவர் காலம், முற்பட்ட சோழர் காலம், பிற்பட்ட சோழர் காலம், கோப்பெருஞ் சிங்கன் காலம்)ப் பகுத்துக் கொண்டு, தக்க கல்வெட்டுச் சான்றுகளையும், இலக்கிய ஆதாரங்களையும் துணையாகக் கொண்டு ஆசிரியர் இந்நூலைப் படைத்துள்ளார்.

சங்க காலத்திய வேளிர் குடிகளுள் ஒன்றான மலையமான் குடி, 'தமிழகத்தில் தோன்றியதா? அல்லது வடக்கே இருந்து வந்ததா?' என்பதைப்பற்றிய ஆய்வு, 'உண்மையை நாடுவ தாக' அமைந்துள்ளது. ஆசிரியரின் ஆராய்ச்சித் திறனை வெளிப்படுத்த இது போன்றிய சான்றாகும்.

சோழப் பேரரசினைத் தாங்கும் தூண்களாக விளங்கிய மலையமான்கள், மிலாடுடையார், சேதிராயர் பற்றிய செய்தி கள் பலவற்றை, ஆசிரியர் அரிதின் முயன்று தொகுத்து, முறைப்படுத்தித் தெளிவுறுத்தி யுள்ளமை இந்நூலின் சிறப்பை மிகுவிப்பதாகும்.

சோழப் பேரரசிற்குச் சமாதி அமைத்தவன் கோப் பெருஞ்சிங்கன் எனும் பல்லவர் மரபைச்சேர்ந்த (கி.பி. 1232 1243) குறுநில மன்னனாவான். அவன் காலத்தில் சோழப் பேரரசைக் கட்டிக்காக்க முயன்ற மலையமான்கள் வரலாறு, அந்தக் குடியின் பெருமையை நிலைநாட்டுவதாக உள்ளது. இதற்கு இடையே வேளக்காரப் படையினரைப்பற்றி வழங்கும் செய்திகள், சமுதாய வரலாற்றிற்குப் புத்தொளி யூட்டுகின்றன.

கொடை வள்ளல்களாகவும், மாவீரர்களாகவும் வாழ்ந்த மலையமான்கள் ஆற்றியுள்ள சமயப்பணியும் கலைத்தொண் டும் நம் கருத்தைக் கவருகின்றன. மலையமான்கள் பற்றிய சில முக்கியக் கல்வெட்டுகள் நூலின் இறுதியில் சேர்க்கப் பட்டுள்ளன. அவை வரலாற்று மாணவர்க்கு உறுதுணை யாகும்.

இத்தகைய சிறப்பியல்புகளோடு நல்ல தமிழில் இந்நூல் எழுதப்பட்டுள்ளமை போற்றத்தக்கதாகும். இந்நூலா சிரியர் புலவர் சு. குப்புசாமியின் அரிய முயற்சிகளுக்குத் தமிழுலகம் துணை நிற்பதாக!

# முன்னுரை

தமிழக அரசியல் வரலாற்றில் பல்லவர் சோழர் பாண்டியர் விசயநகர வேந்தர் முதலான பேரரசர்களின் வரலாறுகளைப் பலரும் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்துள்ளனர். அப்பேரரசு நிலவிய காலங்களில் தமிழகத்தின் பல பகுதிகளில் ஆட்சி செலுத்தி மறைந்து போன குறுநில மன்னர்களின் வரலாறுகள், அவ்வாறு ஆராயப்பெறுதது தமிழ் நாட்டு வரலாற்றில் பெருங்குறையாகும்.

சிற்றரசர்களைப்பற்றி இதுகாறும் எழுந்துள்ள வரலாற்று நூல்கள், விரல் விட்டு எண்ணும் அளவுக்கு மிகச் சிறிய அளவினதாகும். அந்நூல்களின் வரிசையில் இதுவும் ஒன்றாகச் சேர்கிறது. இதனை 'மலையமான்களின் வரலாற்று நூல்' என்று கூறுவதைக் காட்டிலும், அன்னோர் பற்றிய செய்திகளைத் தொகுத்துரைக்கும் நூல் என்றே கொள்ள வேண்டும். ஏனெனில், பேரரசர் காலத்திய நிகழ்ச்சிகளைக் கோவைப்படுத்திக் கூறுவதைப் போல, மலையமன்னர்கள் காலத்து நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்க முடியவில்லை. ஒவ்வொருவரையும் பற்றித் தனித்தனியாகவே சொல்ல முடிகிறது. இம்மன்னர்களின் தொடர்ச்சியான வழிவழி மரபினரையும் அறிந்து கொள்ள இயலவில்லை, ஆதலின், அவர்தம் மரபுவழிப்பட்டியலை இந்நூலில் சேர்க்க இயலாமற் போயிற்று.

இந்நூலினை உருவாக்குதற்குக் கல்வெட்டுகளின் ஆண்டு அறிக்கைகளும், தென்னிந்தியக் கல்வெட்டுகளின் தொகுதிகளும், இந்தியக் கல்வெட்டுகளின் தொகுகளும் எனக்குப் பெருமளவு துணை நின்றன. எனினும், சில இடங்களை அறியும் பொருட்டு, மலையநாட்டின் பல இடங்களுக்கும் செல்ல வேண்டியதாயிற்று. அப்பொழுது மலைய மன்னர்களைப் பற்றிய சில கல்வெட்டுகளை நேரில் படிப்பதற்கும் வாய்ப்புக்கிட்டியது. ஆண்டறிக்கைகளில் கண்டுள்ள கல்வெட்டுகளின் முழுமையான வாசகங்கள் வெளிவரும் பொழுது, இந்நூலில் உள்ள எனது கருத்துகளில் சில மாறி விடவும்கூடும். இது நம்நாட்டு வரலாற்றில் தவிர்க்க முடியாததாகும்.

கல்வெட்டுத் துறையில் என்னை ஈடுபடுத்தி எனக்கு வழி காட்டியருளிய என் ஆசிரியப் பெருந்தகை, கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர், வித்துவான் திரு வை. சுந்தரேசவாண்டையார் அவர்களின் திருவடியை என் நெஞ்சில் நிறுத்தி வணங்குகின்றேன்.

இத்துறையில் எனக்குள்ள ஆர்வத்தினை வளர்க்கும்வகையில், எனது நூலினை முழுமையாகப் படித்து தக்கதொகு

அணிந்துரை நல்கிய உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன இணைப் பேராசிரியர் திரு க. த. திருநாவுக்கரசு அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்முயற்சியில் நான் இயங்குதற்குப் பெரிதும் காரணமாக விளங்கியவர் பெருமதிப்பிற்குரிய என் அருமை நண்பர் வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களே யாவர். அவர்தம் ஒத்துழைப்பினாலேயே இந்நூலினை உருவாக்க முடிந்தது. வரலாற்று நூல்களை வெளியிடுவதில் புதுமையான—அருமையான ஒரு வரலாற்றையே உருவாக்கிக் கொண்டிருக்கும் இவர் மிகச்சிறந்த வரலாற்று ஆர்வலர்; மிகச்சிறந்த சுவைஞர்.

இவருக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு அன்னார்க்கு என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

எனக்குத் தேவையான துணை நூல்களையும் தக்க ஆலோசனைகளையும் நல்கி, என்னை ஊக்குவித்த புதுவைவரலாற்றுச் சங்கத் தலைவர் திரு திருமுடி ந. சேதுராமன் Ex. M. P. அவர்களுக்கும், திரு. P L. சாமி ஐ. ஏ. எஸ் அவர்களுக்கும், இந்நூலுக்கு வேண்டும் நிழற் படங்களையும், கல்வெட்டுத் தொடர்பான அறிக்கைகள், தொகுதிகள் உள்ளிட்ட நூல்களையும் தந்துதவிய புதுவை—பிரஞ்சு இந்திய இயல் கழகத்தார்க்கும் [French Institute of Indology - Pondicherry] அதன்இயக்குநர் உயர்திரு பிரான்சுவா குரோ [Dr. F. Gros] அவர்களுக்கும் என் மன நிறைவான நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூலை உருவாக்குங் காலத்து உடனிருந்து உதவிய என் இனிய நண்பர்கள் புலவர் திரு ந. வேங்கடேசன் அவர்களுக்கும், புலவர் திரு அரு. அப்பாசாமி அவர்களுக்கும் என் நன்றி உரியது.

அனைத்துக்கும் மேலாக என்னை இத்துறையில்சுடுபடுத்தி அருளுகின்ற எல்லாம் வல்ல தில்லை நாயகனை மனமொழி மெய்களான் வணங்குகிறேன்.

எனது பிற நூல்களைப் போலவே இதனையும் தமிழுலகம் ஏற்று, இத்துறையில் எனக்குள்ள ஆர்வத்தை வளர்க்கும் என்று நம்புகிறேன்.

திருமுறை இல்லம்,
10/5E. கிழக்கு மாடவீதி,
பாகூர்-607402,

அன்பன்,
சு. குப்புசாமி

# உள்ளுறை

## இந்நூலாசிரியரின்
## பிற நூல்கள்

1. பல்லவனும் பராந்தகனும்
2. கல்வெட்டுகளில் புதுவைப் பகுதிகள்
3. வரலாற்று வடிவங்கள்
4. வரலாறு கூறும் வாகூர்
5. திருபுவனை
6. பல்லவன் கண்ட பனைமலை (அச்சில்)
7. அறையணி நல்லூர் ( ,, )

# காணிக்கை



என்னை ஈன்றெடுத்த தெய்வங்களாம்

திரு அ. சி. சுப்பராயன்

திருமதி சிவகாமி அம்மையார்

ஆகியோர்க்கு இந்நூலைக் காணிக்கை ஆக்குகிறேன்.

—ஆசிரியன்

# 1

# அறிமுகவாயில்

## பேரரசும் சிற்றரசும்

தமிழக வரலாற்றில் சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தர்களும் குறிப்பிடத்தக்க சிறப்பும் பெருமையும் உடையவர்களாக விளங்குகின்றனர். சங்க இலக்கியங்களும், அயல்நாட்டார்க் குறிப்புகளும், அண்மையில் கண்டுபிடிக்கப்பெற்ற சில கல்வெட்டுகளும் சங்க காலத்து மன்னர்களைப்பற்றிய சிற்சில தகவல்களைத் தருகின்றன.

ஆயினும், அவர்களைப் பற்றிய தொடர்ச்சியான முழுமையான வரலாறுகளை இன்னமும் நாம் அறிந்து கொள்ள இயலவில்லை. சங்க காலத்து வேந்தர்களைத் தொடர்ந்து களப்பிரரும், பல்லவரும், பிற்காலச் சோழரும், பாண்டியரும், விசயநகர வேந்தரும் நம் தமிழகத்தை ஆண்டுள்ளனர். இவர்கள் ஒரு குறிப்பிட்ட காலகட்டம் வரை ஒவ்வொருவரும் ஒரு பேரரசை நிறுவினர்.

## சிற்றரசர் நிலை

இப்பேரரசுகள் நிலவிய காலங்களில் குறுநிலமன்னர்கள் பலர், குறிப்பிட்ட சில இடங்களில் சிற்றரசர்களாக அரசோச்சினர். இவர்கள் அவ்வக்காலத்து அரசியல் நிலைமைக்கு ஏற்ப மாமன்னர்களுக்கு அடங்கியும் மாறு பட்டும் வாழ்ந்தனர். குறிப்பாகப் பிற்காலச் சோழப் பேரரசு நிலைப்பதற்கு, இருக்கு வேளிர் என்னும் குறுநில மன்னர்கள் துணையாக நின்றனர். அதே பேரரசின் வீழ்ச்சிக் குக் கோப்பெருஞ்சிங்கன் என்னும் சிற்றரசன் காரணமாக இருந்தான்.

இம்மன்னர்கள் மாமன்னர்களுடன் மண உறவு கொண் டிருந்தனர். தானைத் தலைவர்களாகவும் தலைமை அமைச்சர் களாகவும் விளங்கினர். பேரரசின் நிர்வாக அமைப்பில் பெருமளவு பங்கு பெற்றிருந்தனர். தம்மையொத்த அரசர் களோடு பாதுகாப்பு ஒப்பந்தங்கள் செய்தனர். இவர் களுள்ளும் பலர் ஒன்றுபட்டும் மாறுபட்டும் வாழ்ந்தனர். வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் தமது வலிமையால் தனி ஆட்சியும் நிறுவினர்.

தனி ஆட்சி நடத்துங் காலத்துத் தம்மினும் 'வலி மிகுந்த அரசனுக்குத் துணையாக நின்று, தமது நிலையை அவ்வப்போது உறுதி செய்துகொண்டனர். மூவேந்தர் களைப்போலவே இவர்களும் கலைச்செல்வங்களைப் படைத் தனர். சமய ஒழுகலாற்றைப் போற்றினர். புலவர்களைப் புரந்தனர். இலக்கியங்களைத் தோற்றுவித்தனர். வள்ளல் களாய்த் திகழ்ந்தனர். புலவர்கள் பாடும் புகழையும் பெற்ற னர். இத்தகு சிறப்புகளுடைய குறுநில மன்னர்களைப் பற்றிய செய்திகள், சங்கஇலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் ஆங் காங்கு சிறிதளவே காணப்பெறுகின்றன. எனினும், அவர்தம் வழிவழி மரபினை அறிந்து கொள்ளத்தக்க சான்றுகள் தொடர்ச்சியாகக் கிடைக்கவில்லை.

குறிப்பாக விசயநகரப் பேரரசு நிலவிய காலங்களில் தமிழகத்தைச் சார்ந்த குறுநில மன்னர்களுக்கு ஆட்சிப் பொறுப்பில் பங்கில்லை. அக்காலங்களில் நாயக்கர்களே ஆட்சிப் பொறுப்பில் வீற்றிருந்தனர். இவர்கள் அனைவரும் வெளி மாநிலத்தைச் சேர்ந்தவர்கள். வேற்று மொழியினர். இதன் விளைவாகத் தமிழகத்துத் தொன்மை வாய்ந்த சிற்றரசுகள் மெல்ல மெல்ல மறைந்தொழிந்தன.

## குறுநில மன்னர்கள்

அதியர், அருவர், ஆவியர், இருக்குவேளிர், ஒளியர், கங்கர், களப்பாளர், காடவராயர், குறுக்கையர், சம்புவ ராயர், திரையர், பழுவேட்டரையர், போசளர், மலையர் (மலையமான்கள்), மழவராயர், முத்தரையர், முனைய தரையர், வாணகோவரையர் முதலான குறுநில மன்னர்கள் தமிழகத்தின் பல்வேறு இடங்களில் தமது அரசை நிறுவி இருந்தனர். அவர்களில் சிலர், சேர சோழ பாண்டிய பல்லவர்களின் வழித்தோன்றல்களாகவும் இருந்தனர். சங்ககாலம் முதல் பிற்காலம்வரை இவர்களில் சிலரைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.

சங்ககாலத்துக் குறுநில மன்னர்களின் வழித்தோன்றல் களில் சிலர், பிற்காலத்தில் மறைந்துபோயினர். பிற்காலத் தில் இருந்த சில சிற்றரசர்கள், சங்ககாலத்தில் இருந்தமைக் குச் சான்றுகள் இல்லை. குறிப்பாகச் சங்ககாலம் முதல் பிற்காலம்வரை அதியர், இருக்குவேளிர், மலையர் முதலா னோரைப்பற்றிய சான்றுகள் உள்ளன.

## போதிய சான்றுகள் இல்லை

பல்லவர், சோழர், பாண்டியர், விசயநகர வேந்தர் முதலானோர் பேரரசர்களாக விளங்கியமையால், அவர் களின் ஆட்சிக் காலங்களில் எழுந்த கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அன்னோரின் வழித்தோன்றல்களையும் அக் காலத்து அரசியல் நிகழ்ச்சிகளையும் சமூக அமைப்பினையும் தெளிவாகத் தெரிவிக்கின்றன.

அக்காலகட்டங்களில் இக்குறுநில மன்னர்கள், அவர்களுக்கு அடங்கி ஒழுகி வந்தமையால், தம்மைப்பற்றிய கல்வெட்டுகளைப் பொறிப்பதற்கும் செப்பேடுகளை வெளியிடுவதற்கும் உரிமையில்லாதிருந்தனர். இதன் விளைவாக, இவர்களைப்பற்றிய செய்திகள் மிகக் குறைந்த அளவிலேயே உள்ளன. இவர்களில் மலையமான்கள் என்னும் குறுநிலத்தவர், குறிப்பிடத்தக்க சிறப்புக்கு உரியவர்கள். ஆட்சித் துறையிலும், சமயத்தொண்டிலும் இவர்கள் பெயர்பெற்று விளங்கினர்.

மலையமான்களைப் பற்றி நமக்குக் கிடைத்துள்ள சான்றுகள், இவர்களின் தொடர்ச்சியான வரலாற்றை அறிந்து கொள்ளப் போதுமானவை அல்ல. எனினும், கிடைத்துள்ள சிறிதளவு சான்றுகளைக் கொண்டு, இவர்களைப் பற்றிய செய்திகளை ஓரளவாவது உணர்ந்து கொள்ள இயலும். அது தமிழகத்து அரசியல் வரலாற்றுக்குப் பெரும்பயன் விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை.

## வேளிர்கள்

மலையமான் திருமுடிக்காரி முதலான மலைய மன்னர்கள் புலர், சங்க இலக்கியங்களில் குறிக்கப் பெறுகின்றனர். பிற்காலச் சோழரின் கல்வெட்டுகளிலும் இவர்கள் இடம் பெற்றுள்ளனர். ஆதலின், இவர்கள் சங்க காலம் தொடங்கிப் பிற்காலம் வரையிலும் நமது தமிழகத்தின் ஒரு பகுதியில் குறுநில மன்னர்களாக விளங்கினர் என்பது வெளிப்படை.

இம்மலையமான்கள் தமிழகத்தின் தொன்மையான குடியினரா அன்றி விசயநகர நாயக்க மன்னர்களைப் போன்று, புதிதாகத் தமிழகம் வந்து நிலைபெற்றவரா என்பதை அறிந்துகொள்ள இலக்கியங்களும், உரையாசிரியர்களின் குறிப்புகளும், சில சாசனங்களும் நமக்குத் துணையாக விளங்குகின்றன.

''பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்'' புறம்: 24

''நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே!'' புறம்: 201

''வீயா விழுப்புகழ் விண்டோய் வியன்குடை
யீரேழு வேளி ரியைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போல'' அகம்: 135

''அடுபோர் வேளிர் வீரை முன்றுறை'' அகம்: 206

''பதினொரு வேளிரொடு வேந்தர் சாய'' அகம்: 246

''தொன்முதிர் வேளிர் ஓம்பினர்'' அகம்: 258

''வேளிரொடு பொரீஇய'' அகம்; 331

''பணைகெழு வேந்தரும் வேளிரும்'' பதிற்றுப்பத்து :30

''வேந்தரும் வேளிரும் பிறரும்கீழ்ப் பணிந்து''
பதிற்றுப்பத்து: 75

''வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய'' பதிற்றுப்பத்து: 88

''இருபெரு வேந்தரொடு வேளிர்'' மதுரைக்காஞ்சி: 55

முதலான சங்க இலக்கியப் பாடல்கள், அக்காலத்துக் குறுநில மன்னர்களை வேளிர் என்று பொதுவாகவே சுட்டுவதைக் காணலாம். பதினான்கு வேளிர் என்றும், பதினொரு வேளிர் என்றும் அகநானூற்றுப் பாடல்கள் கூறுவது இங்கு உளங்கொளத் தக்கது உரையாசிரியர் நச்சினார்க்கினியர், தமது தொல்காப்பிய உரையின் இரண்டு இடங்களில்[1] வேளிர்கள் பதினெண் குடியினர் என்றும், அவர்கள் திருமாலின் வழி வந்தவர்கள் என்றும் குறிப்பிடுகிறார். நச்சினார்க்கினியரின் காலம் கி. பி 14ஆம் நூற்றாண்டாதலால்,[2] அவர் காலத்திலேயே வேளிர்களைப்பற்றிய மேற்கூறிய கருத்து தமிழகத்தில் நிலவியது என்பதில் ஐயமில்லை.

வேளிர்கள் திருமாலின் வழிவந்தவர்கள். ஆதலின், அவர்கள் யாதவர் என்றும் யதுகுலத்தவர் என்றும் குறிக்கப்பெற்றனர். யதுவின் வழிவந்தோர் பதினெண் குடியினர்

என்று மகாபாரதம் கூறுகிறது. எனவே, வேளிர்கள் வடக்கி லிருந்து தெற்கு நோக்கி வந்தனர் என்பர்.3

கி. மு. 7 ஆம் நூற்றாண்டிலேயே வேளிர்களின் குடி யேற்றம் நடந்திருக்க வேண்டுமென்பது பிறிதொரு ஆராய்ச்சியாளரின் கருத்து.4வேளிருள் சிலரும் வேறுசிலரும் முதன் முதலாக அகத்திய முனிவர் தலைமையிலும், பின்னர் கவுண்டின்யர் தலைமையிலும் வடநாட்டிலிருந்து தென்னாடு வந்திருக்க வேண்டுமென்றும் அறிஞர் கருதுவர்.5

சங்க காலத்திலேயே வேளிர்கள் துவராபதியைத் தங்களது தலைநகராகக் கூறிக் கொண்டனர். இதனை,

> "நீயே, வடபான் முனிவன் தடவினுள் தோன்றிச்
> செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
> உவரா வீகைத் துவரை யாண்டு
> நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
> வேளிருள் வேளே!"

என்னும் சங்கப் பாடல் [புறம். 201] வலியுறுத்தும். "துவரா பதியைத் தமது தலைநகராகக் கூறிக் கொண்ட இவ் வேளிர்கள், தம்மை யாதவர் என்றும் குறிப்பிட்டனர். இவை வடநாட்டோடு இவர்களுக்கு உள்ள தொடர்பினை யும், கண்ணன் வழி வந்தோர் என்பதையும் புலப்படுத்து கின்றன. கண்ணன், இவ்வேளிரைக் கங்கைக் கரையிலிருந்து அழைத்து வந்தான். அவர்களில் பதினெண்குடி வேளிர் தமிழகம் வந்தனர்" என்றொரு வரலாறும் உள்ளது.

## இருக்கு வேளிர்

சங்க இலக்கியங்களில் இருக்கு வேளிரைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. மைசூர் நாட்டு அரையம் என்னும் பகுதியை இவர்கள் ஆண்டனர். இப்பகுதியில் ஆட்சி செலுத்திய 'இருங்கோவேள்' என்பவனின் முன்னோன் ஒருவன் புலிகடிமால் என்னும் பெயருடன் திகழ்ந்தான்.6 இவர்கள் யாதவர் என்றும் அழைக்கப்பெற்றனர். இவர்

களில் ஒரு பிரிவினர், தமிழகத்துக் கொடும்பாளூரைத் தலை நகராகக் கொண்டு, பிற்காலத்தில் ஒரு சிற்றரசை நிறுவினர்.[7] மைசூர் ஒய்சளரும், கொடும்பாளூர் இருக்குவேளிரும் தம்மை யாதவர் என்று கூறிக்கொள்வதைக் கல்வெட்டுகளிலும் காணலாம்.

வேளிருள் ஆய் மரபினர் யாதவர் குலத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், கண்ணன் வழிவந்தோர் என்றும் பார்த்திவசேகரபுரச்செப்பேடுகள் கூறுகின்றன.[8] மைசூர் நாட்டின் மற்றொரு பகுதியில் இருந்த போசளரும் தம்மை யாதவர் என்கின்றனர். இப்போசளரும் தமிழகத்துக் கண்ணனூரில் ஒரு சிற்றரசைத் தோற்றுவித்தனர்.

ஆந்திர மாநிலத்து திருப்பதிப் பகுதியில் இருந்த சளுக்கி வீரநரசிங்க தேவன் என்னும் சிற்றரசனை, யாதவ ராயன் என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன,[9] செங்கற்பட்டு மாவட்டம், திருவள்ளூர் வட்டம், இராமகிரி வாலீச்சுரர்க் கோயிலில், வீர நரசிங்கதேவ யாதவராயரின் 36 ஆவது ஆண்டுக் கல்வெட்டுக் காணப்பெறுகிறது.[10] ஒரிசாவில் இருந்த சில வேளிரும் தம்மைக் கங்கை மரபினர் என்றும், கண்ணன் வழியினர் என்றும் கூறினர்.

## மலையமான்கள் வடவரா?

இதுகாறும் கூறியவற்றால் யாதவர் என்று தம்மைக்கூறிக் கொள்ளும் தென்னகத்துச் சிற்றரசர்கள் அனைவரும், வடநாட்டிலிருந்து தென்னாடு புகுந்தவர் என்பது நன்கு புலனாகும். மலையமான்களில் சிலரும் தம்மை யாதவர் என்றனர். ஆதலின், இவர்களும் இருக்கு வேளிரைப் போல வடக்கிலிருந்து தமிழகம் வந்து நிலைபெற்ற சிற்றரசர்களோ என்று கருதத் தோன்றுகிறது.

முதலாம் இராசேந்திர சோழனின் ஆட்சிக் காலத்தில், 'பார்கவ கோத்திரத்து பராந்தக யாதவ வீமனான உத்தம சோழ மிலாடுடையான்' என்னும் பெயருடைய மலையகுலத்து

மன்னன் ஒருவன் இருந்துள்ளான். இவனைப் பற்றிய கல் வெட்டுகள் தென்னார்க்காடு மாவட்டம் எலவானாசூர்ச் சிவன் கோயிலிலும்,11 திருக்கோவலூர் வீரட்டானேச் சுரத்திலும் காணப்பெறுகின்றன.12 இக்கல்வெட்டுகளில் இவன் யாதவன் என்று கூறப்பெறுவது, மலையான்கள் வட நாட்டவர் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கிறது. மலைய மன்னர்களுக்குப் பார்கவ கோத்திரம் குறிக்கப்பெறுவது13 இவர்களின் வடநாட்டுத் தொடர்பினைப் புலப்படுத்துவதாக அமைகிறது. அவ்வாறாயின் இவர்கள் யார்?

## மலையர் குடி

மலையர் என்போர் மலை நாட்டோடு தொடர்புடைய வர்கள். மலைநாட்டுத் தலைவர்கள். நிகண்டுகளும் அகராதி களும் மலையரைச் சேரர் என்று சுட்டுகின்றன. இலக்கண உரையாசிரியர்கள்,மலையமான் நாடுஎன்பது மலாடு என்றும், சோழ நாடு என்பது சோணாடு என்றும்,பாண்டிய நாடு என் பது பாண்டி நாடு என்றும் மருவி வழங்கும் வழக்கத்தைக் குறிப்பிடுகின்றனர்.14 இப்பெயர்கள் தமிழ்நாட்டின் முப் பெரும்பிரிவுகளைப்புலப்படுத்துகின்றன.இவற்றுள்மலையமான் நாடு என்பது சேர நாட்டைக் குறித்து நின்றது.சங்கஇலக்கி யங்களும் சேரரை 'மலையர்' என்று கூறுகின்றன சங்க காலத்தில் வாழ்ந்த மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளல், 'மலையன்' என்றே அழைக்கப் பெற்றான் 15 ஆதலின், மலையரும் சேரரும் ஒருவரே.

சோழ பாண்டிய மன்னர்கள், தமது நாட்டு எல்லையைப் பெருக்கி விரிவுபடுத்த, நில அமைப்பு நல்வாய்ப்புத் தந்தது. அவ்வாய்ப்பு சேர நாட்டுக்குக் குறைவு. சேர நாட்டின் மேற்குப் பகுதி கடற்பகுதி ஆதலின், சேர மன்னர்கள் தமது நாட்டின் எல்லையை மேற்கு நோக்கி விரிவாக்க இயல வில்லை. எனவே, முற்காலத்துச் சேரர் குடியினரில் ஒரு பிரிவினர், கிழக்கு நோக்கி சேலம், வடார்க்காடு, தென்னார்க் காடு ஆகிய மாவட்டங்களின் சில பகுதிகளில் குடியேறினர்.

இவர்கள் வந்து தங்கிய இடங்களும் சேரநாட்டைப்போன்று மலைப்பகுதிகள் நிறைந்த இடங்களாகவே இருந்தன. மெல்ல மெல்ல இங்குச் சிற்றரசுகளை நிறுவினர். சேரர் குடியின் ஒழுகலாற்றின்படி, இவர்கள் மலையர் என்று அழைக்கப் பெற்றனர். பிற்காலத்தில் இவர்களே மலையமான்கள் ஆயினர்.16 நச்சினார்க்கினியர் குடிப்பெயருக்கு எடுத்துக் காட்டாகச்சேரமான், மலையமான்ஆகியோரைக்குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.

இதே காலகட்டத்தில் வடநாட்டின்றும் தென்னாடு வந்து தங்கியிருந்த வேளிர்கள், கண்ணன் வழியினராக மதிக்கப் பட்டனர். இவர்கள் 'வடபால் முனிவன் தடவினுள் தோன்றியதாக' நாடெங்கும் செய்திகள் உலவின. இவற்றால், வேளிர்கள் உயர்ந்தோராகக் கருதப்பெற்றனர். சங்க காலத்துப் புலவர்கள் சிலரும் இக்குறிப்புகளை வெளி யிட்டனர். இவற்றை உறுதி செய்வது போல், பிற் காலத்தில் வாழ்ந்த வேளிர்களில் சிலர், தம்மை யாதவர் என்றும், அக்கினி குலத்தவர் என்றும் கூறிக்கொண்டனர்.

ஆதலின், வேளிரைப் பின்பற்றிப் பிற்காலத்து மலைய மான்களில் சிலர், தம்மை யாதவர் என்றனர். அவ்வாறு கூறியவர் ஓரிரு மன்னர்களே; அவர்களும் கி.பி 11 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். பெரும்பாலான மலைய மான்கள் இவ்வாறு கூறிக் கொள்ளவில்லை. சங்க இலக் கியங்களும் மலைய மன்னரை வேளிர் என்று அழைக்கவில்லை. எனவே, சேரர் குடியினரான மலையமான்கள், வேளிரோடு கொண்ட பிற்காலத் தொடர்பினால், தம்மையும் யாதவர் என்றனர்: இவ்வழக்கத்தை அவர்களே தொடர்ந்து பின் பற்றவில்லை ஆதலின், மலையமான்கள் வேளிர் அல்லர்; சேரர் குடியினரே.

## சேதிராயர்

கி. பி 11 ஆம் நூற்றாண்டிலிருந்து மலையமான்கள் தம்மைச் சேதிராயர் என்று கூறிக் கொண்டனர். மலைய

மான்களும் சேதிராயரும் வெவ்வேறு குடியினர் அல்லர். ஒரே அரசன் மலையமான் என்றும், சேதிராயன் என்றும் கூறப்பெறுவதைப் பல கல்வெட்டுகளில் காணலாம்.

'சேதி நன்னாட்டு நீடு திருக்கோவலூரில் மன்னி' என்று மலையநாட்டைச் சேதிநாடு என்பர் சேக்கிழாரடிகள் 'சேதிநாடு,' 'சேதிராயர்' முதலான பெயர்கள் இவர்களின் வடநாட்டுப் பற்றை உணர்த்துகின்றன. சேதி, வத்சம், கலிங்கம், மகதம். விராடம், நிடதம், அயோத்தி ஆகியவை ஒரு காலத்தில் வடநாட்டில் சிறந்திருந்த சிற்றரசுகளாகும். வடக்கே இருந்த சேதிநாட்டோடு இவர்களுக்குத் தொடர்புண்டு என்பதற்குத் தக்க ஆதாரங்கள் இல்லை. பிற்காலத்தில் இவர்கள் மலையர், சித்தவடவர், மலைய குலராயர், சேதிராயர், கோவலராயர் என்னும் பெயர்களுடன் திகழ்ந்தனர்.

## மலையமான் நாடு

சோழப் பேரரசு நிலவிய காலங்களில் தென்னார்க்காடு மாவட்டத்துத் தென்மேற்குப் பகுதி, மலையமான் நாடாக விளங்கியது. சங்க காலத்து மலையமான் நாட்டின் எல்லையைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. அக்காலத்தில் திருக்கோவலூர், இந்நாட்டின் தலைநகராகத் திகழ்ந்தது. முள்ளூர் மலை என்னும் செழிப்பான மேட்டு நிலப்பகுதி, இந்நாட்டின் எல்லைக்குள் அடங்கி இருந்தது.

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்தின் ஒரு பகுதியும் வடார்க்காடு மாவட்டம் திருவண்ணாமலை வட்டத்தின் ஒரு பகுதியும் மலைய நாடாகவே இருந்துள்ளன. ஆத்தூர்வட்டம், தலைவூர் ஏகாம்பரநாதசுவாமி கோயிற் கல்வெட்டு ஒன்று, அவ்வூர் 'மலாடான ஜனநாத வளநாட்டு ஆற்றூர்க் கூற்றத்தில்' இருப்பதாகக் குறிக்கிறது.18 ஆத்தூர் காயநிர்மலேசுவரர்க்கோயிற் சாசனம் ஒன்றில், 'மலாட்டு ஆற்றூர்க் கூற்றத்துப் பிரம்மதேயம் மலையமானாறு' குறிக்கப் பெறுகிறது. ஆத்தூர் வட்டத்து ஆறகளூரை, 'மலாடான ஜனநாத

வளநாட்டு மகதமண்டலத்து ஆற்றூர்க்கூற்றத்து ஆறகளூர்' என்று அங்குள்ள காமேசுவரர் ஆலயத்துக் கல்லெழுத்துக் கூறுகிறது.[20]

வடார்க்காடு மாவட்டம், திருவண்ணாமலை வட்டத்தி லுள்ள ஆலூர் என்னும் சிற்றூர், சேதி மண்டலந்தில் இருந்த தாக, அங்குள்ள கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.[21] பல்லவர் காலத்துச் செங்கம் நடுகல் ஒன்று, 'மலாட்டு மேற் கோவலூர் நாட்டு இராமந்தைவாடி' என்று கூறுகிறது[22] கல்வெட்டுகளில் மலையமான் நாடு என்பது மலாடு என்று மருவியே வழங்கியுள்ளது. ஒரு கல்வெட்டாவது மலையமான் நாடு என்னும் முழுப்பெயரைக் குறிப்பிடவில்லை, மலாடு என்னும் பெயரை மரூஉ மொழிக்கு எடுத்துக்காட்டாக இலக்கண உரையாசிரியர்களும் எடுத்தாளுவர்.

இனி, விசயநகரப் பேரரசு நிலவிய காலங்களில் இம் மலையமான் நாடு திருவதி ராஜ்யம் என்றும், திருவதி சீர்மை என்றும் குறிக்கப்பெற்றது. குறிப்பாக அச்சுதராயர் காலத்தும் (கி. பி. 1529–42) சதாசிவராயர் காலத்தும் (கி. பி. 1537-75) இப்பெயர்கள் காணப்பெறுகின்றன.[23]

## ஜனநாத வளநாடு

மலையமான் நாட்டுக்கு ஜனநாத வளநாடு என்ற வேறு பெயரும் உண்டு. ஜனநாதன் என்பது முதலாம் இராச ராச சோழனின் சிறப்புப் பெயர்களில் ஒன்று. இம்மன்னன் காலம் முதல், மலைய்மான் நாடு என்பது மலாடான ஜனநாத வளநாடு என்று கல்வெட்டுகளில் இடம் பெற்றது.

> ''தென்பாண்டி குட்டம் குடம்கற்கா வேண்பூழி
> பன்றி அருவா அதன்வடக்கு—நன்றாய
> சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்
> ஏதமில் பன்னிருநாட் டெண்''

என்னும் பழம்பாடல், மலாடு கொடுந்தமிழ் நாடுகள் பன்னிரண்டினுள் ஒன்றென்று கூறுகிறது. ஆதலின், மலாடு

என்பதே மிகப்பெரும்பான்மை வழக்காகும். இதனைச் சேதி நாடு என்பது மிகச்சிறுபான்மை வழக்கேயாம். சேதிநாடு என்னும் பெயரை பெரியப் புராணமும் விக்கிரம சோழன் உலாவும் குறிப்பிடுகின்றன.24 ஆயினும், இவ்விலக்கியங்கள் இயற்றப்பெற்ற காலத்தும், இந்நாடு 'மலாடு' என்றே குறிக்கப்பெற்றதைக் கல்வெட்டுகளின் வாயிலாக அறியலாம். இக்காலத்தில் மலைய மன்னர்களில் சிலர்தாம், சேதிராயர் என்னும் பெயருடன் விளங்கினர்.

## நிலப்பரப்பு

இதுகாறும் கூறியவற்றால், தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோவலூர் வட்டத்தின் மேற்குப் பகுதியும், கள்ளக்குரிச்சி வட்டமும், சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்தின் கிழக்குப் பகுதியும், வடார்க்காடு மாவட்டம் திருவண்ணாமலை வட்டத்தின் ஒரு பகுதியும் இணைந்த நிலப்பரப்பு, அக்காலத்தில் மலையமான் நாடாக விளங்கிய செய்தி புலனாகும். இந்நாடு இரண்டாயிரம் பூமி பரப்பளவு கொண்டதென்று திருக்கோவலூர்க் கல்வெட்டு குறிக்கிறது. 25 ஒரு பூமி என்பது இரண்டு முதல் பத்து வேலி அளவுள்ள நிலப்பரப்பாக இருக்கலாம் என்பது ஆய்வாளரின் கருத்து.26

## நில அமைப்பும் மக்களும்

மலையமான் நாட்டு நிலப்பரப்பின் பெரும்பகுதியில் மலைகளும், சிறுசிறு குன்றுகளும், குறுங்காடுகளும் நிறைந்திருந்தன. இங்கு நன்செய் நிலங்கள் குறைவு. புன்செய் நிலங்கள் மிகுதி. பயன்படுத்தத் தகுதியற்ற நிலங்கள் ஏராளமாக இருந்தன. சமவெளியில் உள்ள சிறிதளவு நிலங்களையே மக்கள் பயன்படுத்தினர். பாசன வசதிகள் குறைவாக இருந்தமையால், புன்செய்ப் பயிர்களையே விளைவித்தனர். ஏரிகள் அதிக அளவில் இருந்தும் அவை, மழைக் காலங்களிலேயே நீரைத் தேக்க முடிந்தது. தென்பெண்ணை ஆறு, கெடிலம் ஆகிய ஆறுகள் இந்நாட்டின் சில பகுதிகளை

வளங்கொழிக்கச் செய்தன. இந்நிலையும் ஆண்டு முழுதும் தொடர்ச்சியாக இல்லை. மக்களில் பெரும்பாலோர் கிணற்றுப்பாசனத்தையே நம்பி வாழ்ந்தனர். பிறநாடுகளை நோக்க, இது வளம் குன்றிய நாடாகவே விளங்கியது. குறிப்பிடத்தக்க கனிவளங்கள் இங்கு ஏதுமில்லை.

மலைய நாட்டுமக்கள் செல்வச்செருக்கோடு வாழ வழியில்லை. கடின உழைப்பிலேயே காலம் தள்ளினர். இதன் விளைவாகப் பெரு நகரங்கள் தோன்றிச்சிறக்க வாய்ப்பில்லை. திருக்கோவலூர், கிளியூர், அறையணி நல்லூர், திருநறுங்கொண்டை, சண்பை, இறையூர், இறையானரையூர், சித்தலிங்கமடம், மணலூர்ப்பேட்டை, கள்ளக்குறிச்சி, ஆத்தூர், ஆறகளூர், ஆடையூர், திருவண்ணாமலை உள்ளிட்ட சில ஊர்களே வாணிகம் மிகுந்த பெரு நகரங்களாகத் திகழ்ந்தன. பெரும்பாலான மக்கள் மலைப்பகுதிகளிலும் குறுங்காடுகளின் இடையிலும் சிறுசிறு கிராமங்களில் வாழ்ந்தனர். இன்றியமையாத பேரூர்களையே பெருவழிகள் இணைத்தன. சிற்றூர்களுக்கு ஒற்றையடிப் பாதைகளே இருந்தன.

சமயத் துறையில் இந்நாடு தலைசிறந்து விளங்கியது. ஒரு காலத்தில் இங்குச் சமண மதம் செல்வாக்குடன் விளங்கியது. இப்பகுதியில் சமண முனிவர்களைக் கண்டதாகத் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார். திருநறுங்கொண்டையில் சமணப் பள்ளிகள் இருந்தன. அது சமயக் கல்வி நிறுவனமாகவும் திகழ்ந்தது. இது சமணர்களின் புனிதத் தலம். பிற்காலத்தில் இங்குச் சைவமும் வைணவமும் செல்வாக்குப்பெற்றன. இந்நாட்டில் நடுகல் வழிபாடுகள் நிறைந்திருந்தன.

## தலைநகர் திருக்கோவலூர்

மலையமான் நாட்டிற்குத் தலைநகராக விளங்கிய பெருமையுடையது திருக்கோவலூராகும். இது தென்னார்க்காடு மாவட்டம், திருக்கோவலூர் வட்டத்தில், தென்

பெண்ணையாற்றுத் தென் கரையில் அமைந்துள்ள நகராகும். இவ்வூரினை 'துஞ்சா முழவிற் கோவல்' என்றும், 'முரண்மிகு கோவலூர்' என்றும் சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன.27

"பணைகளுலவு மைப்பொழிற் பழனஞ்சூழ்ந்த கோவலூர்"

"வளங்கொள்பெண்ணை வந்துலா வயல்கள் சூழ்ந்த
கோவலூர்"

"போதில்வண்டு பண்செயும் பூந்தண் கோவலூர்"

என்று திருக்கோவலூரின் பல்வேறு வளங்களைத் திருஞான சம்பந்தர் குறிப்பிடுகிறார்.28

"குலைகொள்மாங் கனிகள் சிந்துங் கோவல்"

"கொழித்துவந் தலைக்குந் தெண்ணீர்க் கோவல்"

"குரவொடு கோங்கு சூழ்ந்த கோவல்"

என்று திருநாவுக்கரசரும் குறிப்பர்.29 வைணவப் பெரியாரான திருமங்கையாழ்வாரும்,

"செஞ்சாலி விளைவயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூர்"

என்று குறித்துச் சென்றார்.30 இவரேயன்றி, பொய்கையாழ்வாரும், பூதத்தாழ்வாரும் இப்பகுதியினைக் கோவல் என்றே குறித்தனர்.31

"இறைவ னரும்பாக்க மெல்லைக் கற்குட்டம்
முறைசேர் கோவல் முழைசுனை—பிறைநுதலாய்
வெண்மாறங்கெல்லை மேல்பால் கறடிவடவாறு கீழ்பால்
கண்ணத்தம் பாடியாங் காண்"

அரும்பாக்கத்தின் எல்லையைக் கூறுகின்ற இக்கல்வெட்டுப் பாடலும்32 கோவல் என்று கூறுவது குறித்துணரத் தக்கது. ஆதலின், இவ்வூரின் தொன்மையான பெயர் கோவல் அல்லது கோவலூர் என்பதேயாகும். திருக்கோவிலூர் என்னும் இக்காலத்து வழக்கு பிழையானதாகும்.

## மேற்கோவலூர்

முற்காலத்தில் கோவலூர் என்னும் பெயரில் இரண்டு ஊர்கள் இருந்தன. அவற்றுள் ஒன்று திருக்கோவலூருக்கு மேற்கே செங்கம் பகுதியில் இருந்தமையால், அது மேற் கோவலூர் என்று பிரித்துக் கூறப்பெற்றது. பல்லவமன்னன் முதலாம் நரசிம்மவர்மனின் ஆட்சிக் காலத்தில், இம்மேற் கோவலூர்ப் பகுதி முத்தரையர்களின் ஆதிக்கத்தில் இருந் துள்ளது.[33]

## வீரட்டானம்

மலையநாட்டின் தலைநகரான திருக்கோவலூர், சைவர் களும் வைணவர்களும் கொண்டாடும் சிறப்புமிக்க தல மாகும். இங்குள்ள சிவன் கோயில் எட்டு வீரட்டானங் களுள் ஒன்று. இறைவன் வீரட்டனார் என்று தேவாரத் திலும், வீரட்டானமுடைய மகாதேவர் என்று கல்வெட்டு களிலும் குறிக்கப்பெறுகிறார். ஞானசம்பந்தரும் நாவுக் கரசரும் இவரைப் பாடிப் பரவினர். இங்கு இறைவன் அந்தகாசுரனைக் கொன்றதாக வரலாறு. இத்தலத்தின் சிறப்பினை விளக்கவல்ல கீழையூர் தலமாகாத்துமியம் என்னும் நூல், இன்னமும் அச்சேறாச் சுவடியாகவே உள்ளது. இங் குள்ள கல்வெட்டுகள் பதிவு செய்யப் பெற்று கீழையூர் வீரட்டானேசுவரன் தேவஸ்தான சிலாசாசனம் என்னும் பெயருடன் தொகுக்கப் பெற்றன. இவையும் அச்சு வடிவம் பெறவில்லை. இச்சிவன் கோயில் திருக்கோவலூரின் மற் றொரு பகுதியான கீழையூரில், தென்பெண்ணை யாற்றின் தென்கரையில் அமைந்துள்ளது.

## இடைக்கழி எம்பெருமான்

திருக்கோவலூரின் மேற்குப் பகுதியில் திருமாற்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் போர்க் காலக் கோட்டையாகவும் பயன்படுத்தப் பெற்றது. கி.பி 1758ஆம் ஆண்டில் ஆங்கிலப் படையும், கி.பி 1760ஆம்

ஆண்டில் மைசூர்ப் படையும் இதனைக் கைப்பற்றின. இக்கால கட்டத்தில் நிகழ்ந்த போரில், இக்கோயில் மூலவ ராக விளங்கிய திருவிக்கிரமப் பெருமாளின் திருமேனி சிதைவுற்றது. தற்போதுள்ள திருமேனி மரத்தாலானது.[34] முகமதியருக்கும் ஆங்கிலேயருக்கும் நடந்த சண்டையில் கோபுரம் இடிந்தது.[35]

முற்காலத்தில் இத்திருமால் திரு இடைக்கழி ஆழ்வார் என்று குறிக்கப் பெற்றார். இப்பெயரை ஆழ்வார்களும் ஆண்டுள்ளனர். வைணவர்கள் இத்தலத்தினை ஐந்தாவது கிருஷ்ண க்ஷேத்திரமாக் கொள்வர். கோபாலனாகிய திருமால் இங்கு கோயில் கொண்டமையின், இத்தலம் திருக்கோவலூர் என்று பெயர் பெற்றதாகவும் கூறுவர். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய முதலாழ்வார் மூவரும், இத்தலத்தில் சந்தித்ததாக வரலாறு கூறும்.

பாவருந் தமிழாற் பேர்பெறு பாவலர் பாதிநா ளிரவில்
மூவரு நெருக்கி மொழிவிளக் கேற்றி முகுந்தனைத்
தொழுத நன்னாடு
தேவரு மறையு மின்னமுங் காணாச் செஞ்சடைக்
கடவுளைப் பாடி
யாவரு மதித்தோர் மூவரி லிருவர் பிறந்தநாடிழந்த
நன்னாடு

என்று இந்நிகழ்ச்சியை வரந்தருவாரும் குறிப்பிடு கிறார். இத்தலத்தின் சிறப்பினை விளக்கும்,

'திருக்கோவலூர் திருவிக்கிரமப் பெருமாள் தலமகத்துவம்'

'திருக்கோவலூர் திருவிக்கரமப் பெருமாள் தலமாகாத்துமியம்'

'திருக்கோவலூர் திருவிக்கிரமப் பெருமாள் தேவஸ்தான
ஸ்தல மாகாத்துமியம்'

முதலான நூல்களும், கல்வெட்டுகள் தொகுக்கப் பெற்ற,

'திருக்கோவலூா கோயில் சிலாசாசனம்'

'திருவிக்கிரமப் பெருமாள் சிலாசாசனம்'

என்னும் பெயருடைய நூல்கள் இன்னமும் ஏட்டளவிலேயே உள்ளன. அச்சாகாதிருக்கும் மேற்கண்ட நூல்கள் அனைத்தையும் தமிழ்நாடு அரசு கீழ்த்திசைக் கையெழுத்துச் சுவடி நூலகத்தில் காணலாம். 36

இவ்வாறு சங்க காலப் புலவர்களாலும், சைவ வைணவப் பெரியார்களாலும், மலைய மன்னர்களாலும் பெரிதும் போற்றப் பெற்ற அக் கோவலூர், திரு என்னும் அடைமொழியோடு இணைத்துக்கூறப்பெறுதல் பொருத்தமேயாம். இக்காலத்தில் திருமாற்கோயில் உள்ள நகர்ப்பகுதி திருக்கோவலூர் என்றும், சிவன் கோயில் உள்ள நகர்ப்பகுதி 'கீழையூர்'என்றும் பிரிந்துள்ளன. கோப்பெருஞ்சிங்கனுக்கும் ஒய்சள மன்னன் இரண்டாம் நரசிம்மவர்மனுக்கும் இங்கே தான் பெரும்போர் நடந்தது.

## ஸ்ரீ மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம்

திருக்கோவலூருக்கு ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதி மங்கலம் என்ற வேறொரு பெயரும் இருந்துள்ளது. மதுராந்தகன் என்பது முதலாம் இராசேந்திர சோழனின் சிறப்புப் பெயர்களில் ஒன்று. 37திருக்கோவலூர்க் கல்வெட்டுகளில் இம்மன்னனின் 24 ஆவது (கி.பி 1036) ஆண்டுக் கல்வெட்டிலிருந்துதான் இப்பெயர் காணப் பெறுகிறது. 38 ஆதலின், திருக்கோவலூர் முதலாம் இராசேந்திர சோழன் காலம் முதல், அவன் சிறப்புப் பெயரால் ஸ்ரீ மதுராந்தகச்சதுர்வேதி மங்கலம் என்று குறிக்கப் பெற்றமை தேற்றம்.

இவ்வூர் மலையமான் நாட்டு உட்பிரிவுகளில் ஒன்றான குறுக்கைக் கூற்றத்தில் அமைந்திருந்ததாகக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பல்லவ மன்னன் நிருபதுங்கவர்மனின் கல்வெட்டு முதல் இக் குறுக்கைக் கூற்றம் குறிப்பிடப் பெறுகிறது.39

## கூற்றங்கள்

இத்தகு பழமையும் பெருமையும் சிறப்பும் உடைய திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்ட மலையமான்

நாடு, நிர்வாகத்தின் பொருட்டுப் பல கூற்றங்களாகப் பிரிக்கப்பெற்றது. அவற்றுள் ஆரூற்றூர்க் கூற்றம், ஆற்றூர்க் கூற்றம், குறுக்கைக் கூற்றம், நரையூர்க் கூற்றம், பரனூர்க் கூற்றம், திம்மிச்சூர் நாடு, வேம்பார்க் கூற்றம் முதலானவற்றைக் கல்வெட்டுகளால் அறியலாம்.

தென்னார்க்காடு மாவட்டம் விருத்தாசலம் வட்டத்தின் ஒரு சிறு பகுதி. ஆரூற்றூர்க் கூற்றமாக விளங்கியது. இதனை நல்லூர், பாண்டபுரம் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டத்தின் ஒரு பகுதி ஆற்றூர்க் கூற்றமாக இருந்தது. ஆத்தூர், ஆறகளூர், திடலூர்க் கல்வெட்டுகள் இதனைக் குறிப்பிடுகின்றன.

தென்னார்க்காடு மாவட்டம் திருக்கோவலூர் வட்டத்தின் ஒரு பகுதி குறுக்கைக் கூற்றமாக விளங்கியது. சித்திலிங்க மடம், பெரிய குறுக்கை, திம்மிச்சூர், திருக்கோவலூர், நெய்வனை முதலான ஊர்களிலுள்ள கல்வெட்டுகள் இக் கூற்றத்தைக் கூறுகின்றன.

தென்னார்க்காடு மாவட்டம் கள்ளக்குரிச்சி வட்டத்தின் ஒரு பகுதி நரையூர்க் கூற்றமாக இருந்தது. ஆலம்பலம், கூகையூர், நரையூர்க் கல்வெட்டுகள் இதனைக் குறிப்பிடுகின்றன.

பரனூர்க்கூற்றமும் திம்மிச்சூர் நாடும் திருக்கோவலூர் வட்டத்தின் வெவ்வேறு பகுதிகளாக இருந்தன. எலவானாசூர், பாந்தூர், திம்மிச்சூர்க் கல்வெட்டுகள் இவற்றைக் குறிக்கின்றன. திருச்சி மாவட்டம் பெரம்பலூர் வட்டத்தின் ஒரு சிறு பகுதி வேம்பார்க் கூற்றமாக விளங்கியது. இதனை அரும்பாவூர், வெண்பாவூர்க் கல்வெட்டுகளால் அறியலாம்.40

பிற் காலத்தில் நிர்வாகப் பொறுப்பேற்றுச் சென்ற மலைய மன்னர்களில் சிலர், இக் கூற்றங்களில் தங்கியிருந்தனர். காலப் போக்கில் இவர்களில் சிலர், ஒரு குறிப்பிட்ட

நிலப்பகுதியைத் தனியாகவே ஆளத் தொடங்கிப் புதிய மர பினைத் தோற்றுவித்தனர். இத்தகையோரில் ஆடையூர் நாடாழ்வாரும், இறையூர்ச் சேதிராயரும், கிளியூர் மலையமான் களும் குறிப்பிடத் தக்கவர்கள். சிற்சில காலங்களில் வாணகப்பாடி நாடும், சிங்கபுர நாட்டின் ஒரு பகுதியும் இவர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தன.

## குறிப்புகள்

1. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சிறப்புப்பாயி ரம் உரை & அகத்திணை இயல்,சூத்திரம்,32 உரை.
2. தமிழ் இலக்கிய வரலாறு, 14ஆம் நூற்றாண்டு (1969), பக். 121, திரு மு. அருணாசலம், M.A.
3. வேளிர் வரலாறு (1916) பக். 5 — திரு மு. இராகவையங்கார்.
4. தமிழக வரலாறு (1974), பக், 135—டாக்டர் மா. இராசமாணிக்கனார்.
5. யாவரும் கேளிர் (1973), பக்,198—டாக்டர் இரா. நாகசாமி & இந்தியப்பண்பாடும் தமிழரும் (1971) பக், 249—திரு எஸ். இராமகிருஷ்ணன்.
6. கல்லும் சொல்லும் (1977), பக், 67—டாக்டர் இரா. நாகசாமி & The Hoysalas, p, 203— J.D.M. Derrett
7. சங்க காலத்தில் இருந்த இருக்குவேள் அரசர்க்கும் பிற் காலத்தில் இருந்த இருக்குவேள் அரசர்க்கும்

யாதொரு தொடர்பும் இல்லை என்பர் திரு மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள், களப்பிரர் ஆட்சியில் தமிழகம் (1977) பக், 64

8. பாண்டியர் செப்பேடுகள் பத்து (1967) பக்,அ.18 —தமிழ் வரலாற்றுக் கழக வெளியீடு

9. S.I.I., vol, XVII; Nos, 294 to 297 & 299

10. S.I.I., vol, XVII, No, 711

11. வரலாற்று வடிவங்கள் (1976), கல்வெட்டு எண் 3 —புலவர் சு. குப்புசாமி

12. S.I.I, vol, VII, No. 891

13. A.R.E 1906, No, 133 & A.R.E. 1922, No. 29

14 நன்னூல், சூ. 267, சங்கர நமச்சிவாயர் உரை & சூ, 266, மயிலைநாதர் உரை

15. புறநானூறு, செ. 124 & 158— குறுந்தொகை செ. 312

16 The Surnames of the Cankam Age Literary and Tribal, pp, 117-138-M.A. Dorai Rangaswamy

17. தொல்காப்பியம், சொல்லதிகாரம், சூ. 167

18. A.R.E. 1913, No, 461

19. A.R.E. 1913, No. 403

20. A.R.E. 1913, No, 404 & Gazetteer of Salem District (1967), p. 655

21. A R.E. 1919, Nos, 240 & 298

22. செங்கம் நடுகற்கள் (1972), எண், 1971/51— டாக்டர் இரா. நாகசாமி

23. Tirupati Devasthanam Epigraphical Report (1930), Part II, pp, 231 & 272—Sadhu Subrahmanya Sastry B.A.

24. திருத்தொண்டர் புராணம், மெய்ப்பொருள் நாயனார், பா-1 & விக்கிரம சோழன் உலா, அடி. 168

25. Epigraphia Indica, vol, VI1. No, 19k p, 146

26. கல்வெட்டுகளால் அறியப்பெறும் உண்மைகள் (1961), பக், 29—வித்துவான் திரு தி.வை. சதாசிவ பண்டாரத்தார்

27. அகநானூறு, செய், 35 & புறநானூறு, செய், 99

28. தேவாரம், இரண்டாம் திருமுறை, திருக்கோவலூர் வீரட்டம், பா. 4, 5 & 8

29. தேவாரம், 4ஆம் திருமுறை, திருக்கோவலூர் வீரட்டம். பா. 2, 3 & 10

30. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், பெரிய திருமொழி, இரண்டாம் பத்து, பத்தாம் திருமொழி, பா-1

31. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், முதல் திருவந்தாதி, பா, 86 & இரண்டாந் திருவந்தாதி பாடல் 70

32. S.I.I., vol· VII, No, 857

33. முத்தரையர் (1976), பக். 30-39, திரு நடன. காசிநாதன், M.A.

34. South Arcot District Gazetter (1962), pp, 480 & 481—Dr B.S. Baliga

35. A:R.E. 1922, Part. II, Para 9

36. An Alphabetical index of Tamil Manuscripts in the Government Oriental Manuscripts library Madras, Mackenzie's Collections, vol, III, parts I & II, Nos, 426 to 430 & 1126 to 1128

37. S.I:I., vol, III, No, 205, verse, 85

38. S.I.I, vol, VII, No, 141

39. S.I.I., vol, VII, No, 926

40. Political Geography of the Chola Country (1973) Appendix-IV-Y. Subbarayalu, M A.,M.,Litt.,



# 2

## சங்க காலம்

### மலையமான் திருமுடிக்காரி

சங்க காலம் என்பது கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி 2ஆம் நூற்றாண்டு வரையிலான கால கட்டம் என்பர். இக்காலத்தில் வாழ்ந்த சில மலைய மன்னர்களைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்பெறுகின்றன. சங்க கால மலையமான்களைப் பற்றி அறிந்து கொள்ள இவற்றைத் தவிர வேறு சான்றுகள் இல்லை.

அக்கால மன்னர்களில் பெருமையும் சிறப்பும் உடையவன் மலையமான் திருமுடிக்காரி என்னும் சிற்றரசனே ஆவான்.

தமிழக வரலாற்றில் மலையமான் திருமுடிக்காரியே மலைய குல மன்னர்களில் முதல்வனாகத் தோன்றுகிறான். மூவேந்தரைப் போல இவனும் முடியணிந்த காரணம் பற்றி திருமுடிக்காரி என்று பெயர் பெற்றான்.

"காரி யூர்ந்து பேரமர் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையன்" —புறம். 158

என்று இவனைக் கடை ஏழு வள்ளல்களில் ஒருவனாகப் பெருஞ்சித்திரனார் சித்திரிக்கிறார். இவனைக் கபிலரும் மாறோக்கத்து நப்பசலையாரும் பாடினர். இவனுடைய குதிரைக்கும் காரி என்றே பெயர் வழங்கியதாகச் சிறுபாணாற்றுப்படை (அடி. 110) கூறுகிறது.

திருமுடிக்காரி கோவலூரிலிருந்து அரசோச்சினான் "துஞ்சா முழுவின் 'கோவற் கோமான்; நெடுந்தேர்க் காரி". என்னும் அகநானூற்றுப் பாடற்பகுதி (35) இதனை விளக்கும். பெண்ணையாற்றைச் சார்ந்த நிலப்பகுதி இவனது ஆளுகையில் இருந்தமையைப் "பெண்ணையம் படப்பை நாடுகிழவோயே" என்னும் மாறோக்கத்து நப்பசலையாரின் கூற்றினால் அறியலாம்.

வடார்க்காடு மாவட்டம் செங்கண்மா என்னும் ஊருக்குத் தெற்கே, தென்பெண்ணையாற்றின் தென் மேற்கிலுள்ள முள்ளூர் கானமும் இவனுடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்தது.

"பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந"
—புறம். 126

"முரண்கொள் துப்பிற் செவ்வேல் மலையன்
முள்ளூர்க் கானம்" —குறுந்தொகை. 312

என்னும் பாடற்பகுதிகள், முள்ளூர்க்கானம் இவன் ஆட்சியில் இருந்தமையைப் புலப்படுத்துகின்றன. அவன் நாடு கடலாலும் பகைவராலும் கொள்ளப்படாத பாதுகாப்புடையது.

## வள்ளன்மை

காரியைப்பாடிய புலவர்கள் பரிசில் பெறாமல் திரும்புவதில்லை. முள்ளூர் மலையில் பெய்யும் மழைத்துளிகளைக்

காட்டிலும், இவன் புலவர்களுக்குப் பேரெண்ணிக்கையில் தேர்களை வழங்குவானும். இச்செய்திகளை,

"மகிழா தீத்த விழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே" —புறம். 123

"வறிது பெயர்குநர் அல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே" —புறம். 124

என்னும் பாடல்கள் உணர்த்துகின்றன.

## முள்ளூர்ப் போர்

திருமுடிக்காரியின் ஆளுகைக்கு உட்பட்டு மிகப் பாது காப்பாக இருந்த முள்ளூர்க் கானம், ஆரியர்களால் முற்றுகை யிடப் பெற்றது. முள்ளூர்க் கானம், போர்க்களமாக மாறியது. ஆரியப்படையும் காரியின் படையும் மோதிக் கொண்டன- இறுதியில் காரியின் வேற்படையின் முன் நில்லமாட்டாது ஆரியப்படை தோற்றோடியது.

""ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி யாங்கு" —நற்றிணை. 170

என்று இப்போர், சங்கப்பாடலில் குறிக்கப் பெறுகிறது. இனி, இக்காரியோடு போரிட்ட ஆரியப்படை, பல்லவ அரசனின் புடையாக இருக்கலாம் என்றும், வட இந்தியாவில் இருந்த யௌத்தெய கனத்தார் எள்றும் இருவேறு கருத் துகள் உள்ளன. 1 அது எவ்வாறாயினும், அப்படை காரி யிடம் தோற்றோடியமை திண்ணம்.

## துணையாளன்

முடியுடைய மூவேந்தரும் இவனுடைய துணையை அவ்வப்போது நாடினர். இவன் யாருக்குத் துணையாகச்

சென்றானே அம்மன்னனே போரில் வெற்றி பெற்றான். இதனை,

> "வியாத் திருவின் விறல்கெழு தானை
> மூவரு ளொருவன் துப்பா கியரென
> ஏத்தினர்" —புறம். 99

என்பார் புலவர். ஒரு சமயம் சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனும், இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் சோழ மன்னனும் தம்முள் மாறு பட்டுப் போரிட்டனர். இப்போரில் காரி சோழனுக்குத் துணை நின்றமையால், சோழன் வெற்றி பெற்றான்.

> "வெல்வேல் மலையன் அல்லன் ஆயின்
> நல்லமர் கடத்தல் எளிதுமன் நமக்கு"—புறம். 125

என்று சேரமன்னன் அங்கலாய்த்துக் கொண்டானும்.

## ஓரியுடன் போர்

திருமுடிக்காரி மலையமான் நாட்டுக் குறுநில மன்னனாக விளங்கிய அதே காலகட்டத்தில், ஓரி என்பான் கொல்லி மலைப் பகுதியில் ஆட்சி செலுத்தினான். காரியைப் போலவே ஓரியும் கடை ஏழு வள்ளல்களில் ஒருவன். எக்காரணம் பற்றியோ இவ்விருவரும் போரிட்டனர். இப்போரில் ஓரி கொல்லப்பட்டான். வெற்றி பெற்ற காரி, ஓரியின் நகரிலே வலம் வந்தான். இந்நிகழ்ச்சியைக் கபிலர் பின்வருமாறு குறிக்கிறார்.

> "ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவிற்
> காரி புக்க நேரார் புலம்போல்" —நற்றிணை. 320

சிறுபாணாற்றுப்படையும் இப்போர் நிகழ்ச்சியைக் கீழ்க் கண்டவாறு கூறுகிறது.

> "காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
> ஓரிக் குதிரை ஓரியும்" [அடிகள் 110—111

ஓரியைக் கொன்ற காரி கொல்லிமலையைச் சேரனுக்கு வழங்கினான்.[2] சேரமன்னனுக்கு ஆதரவாகவே இவன் ஓரியுடன் போரிட்டான். சேரன், கொல்லி நாட்டின்மேல் நேரடியாகப் படையெடுத்துச் செல்லாமல், காரியைக் கொண்டு, ஓரியைக்கொன்று, கொல்லி நாட்டைத் தன் நாட்டோடு இணைத்துக் கொண்டான் என்பர்.[3] இந் நிகழ்ச்சிக்குப் பிறகு இவன் 'கொல்லிமலைப் பொருநன்' என்று புகழ் பெற்றான்.

சேரமன்னன் கொல்லிமலை நாட்டைத் தன் நாட்டோடு இணைத்துக் கொண்டதைப்போல, அதியமானின் தகடூரையும் தன் நாட்டோடு இணைத்துக்கொள்ள விரும்பி, அதியமானோடு போரிட்டுத் தகடூரை அழித்தான். இப்போர்,

"வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி" —பதிற்றுப்பத்து. 78

என்று அரிசில் கிழாரால் குறிக்கப்பெறுகிறது. இப்போரில் சேரனுக்குத் துணையாக மலையமான் திருமுடிக்காரியும் சென்றிருக்க வேண்டும்.

இத்தகைய போர் நிகழ்ச்சிகளில் மலையமான் திருமுடிக் காரி, ஒரு சமயம் சோழனுக்கும் பிறிதொரு சமயம் சேரனுக்கும் துணையாக நின்ற செய்தி புலனாகும். இவ்வாறு சமயத்திற்கேற்றவாறு தனது ஆதரவை மாற்றிக்கொண்டு வந்தமையால், முடியுடை மூவேந்தரில், ஒருவனின் ஆதரவையேனும் இவன் நிலையாகப் பெறவில்லை. போதாக்குறைக்கு ஓரியைக் கொன்றும், தகடூரை அழித்தும் தம்மையொத்த சிற்றரசர்களின் பகையையும் தேடிக்கொண்டான். ஆதலின், இவன் பகைவர்கள், காலம் கருதிக் காத்திருந்தனர். அவ்வாறு இருந்தவர்களில் அதியமான் நெடுமானஞ்சி குறிப்பிடத்தக்கவன்.

## அஞ்சியுடன் போர்

காரி தமது வாழ்நாளின் பெரும்பகுதியைப் போரிலேயே கழித்தான், இறுதிக்காலத்தில் இவன் நாடும் தலை

நகரும் தாக்கப்பெற்றன. இம்முறை அதியன் திருக்கோவ லூரின்மீது படையெடுத்தான். இப்போரில் திருக்கோவலூர் பெரிதும் சேதமுற்றது.

"முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே!" —புறம். 99

என்று அதியமானை ஒளவையார் புகழ்வதால் இதனை உணர லாம். இப்போரில் திருமுடிக்காரி இறந்திருக்கவும் கூடும். பிறகு அதியமானைச் சேரமன்னன் வெற்றிகொண்டா னென்பர்.[4]

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். மலையமான் மக்களை யானையின் கீழிட்டுக் கொல்ல முயன்ற போது, கோவூர்க்கிழார் தடுத்து நிறுத்திய நிகழ்ச்சி யொன்றைப் புறநானூறு (செய்யுள்: 46) கூறுகிறது. இதுவும் காரி தேடிக்கொண்ட பகைமையின் விளைவே. பிற்காலத்துத் தொண்டை மண்டல சதகமும் காரியின் வள்ளன்மையைப் புகழ்ந்து பேசுகிறது.[5] காரியின் பெயருடைய ஊரொன்று திருக்காரிகுடி என்றுகல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.[6]

இம்மன்னனின் இறுதிக்கால நிகழ்ச்சிகளை நாம் தெளி வாக அறிந்துகொள்ள இயலவில்லை. எனினும், சங்ககாலத் தில் வாழ்ந்த மலையமான்களில் இவனே பேராண்மை மிக்க பெருவீரன். சிறந்த கொடையாளன். நிலைத்த நிறைந்த புகழாளன்.

## சோழிய ஏனாதி திருக்கண்ணன்

### கண்ணனுக்கு முன்னோன்

மலையமான் திருமுடிக்காரிக்குப்பின் மலைய நாட்டு மன்னனாகத் திகழ்ந்தவன் திருக்கண்ணன். சோழன் குள

முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் யானையின் கீழிட்டுக் கொல்ல முயன்ற காரியின் புதல்வர்களில், இத்திருக் கண்ணனும் ஒருவன் என்பர்.7 இவன் காரியின் மகனே ஆயினும், யானையின் கீழ் இடப்பெற்றவன் இவனாக இருத்தல் இயலாது.

திருக்கண்ணனின் முன்னோன் ஒருவன், பகைவர்க்கு அஞ்சி முள்ளூர்மலையில் ஒளிந்துகொண்டிருந்த சோழ மன்னனை வெளிக்கொணர்ந்து, மீண்டும் அவனைச் சோழ நாட்டுக்கு அரசனாக்கினான். இச்செய்தியை மாறோக்கத்து நப்பசலையார் குறிக்கிறார் [புறம். 174]. இவ்வாறு ஒளிந்தவன் சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கு அஞ்சி ஒளிந்த சோழன், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியாக இருக்கலாம். திருக்கண்ணனின் முன்னோன் திருமுடிக்காரி, இச்சோழனுக்குத் துணையாக இருந்து வெற்றி தேடித் தந்தான் என்பது நினைவுறத் தக்கது. 174ஆவது புறப்பாடல் இதனை வலியுறுத்தும்,

திருக்கண்ணனின் முன்னோன் இறந்தபோது, மலைய நாட்டு மக்கள், மன்னன் இல்லாது துன்புற்றனர் என்றும், அத்துன்பம் தீர இவன் அரசன் ஆனான் என்றும், மாறோக் கத்து நப்பசலையார் புறம் 174 ஆவது பாடலில் குறிப்பிடு கிறார். அவர் கூறும் 'முன்னோன்' மலையமான் திருமுடிக் காரியே என்பதில் ஐயமில்லை. ஏனெனில், இப்புலவர், காரி, திருக்கண்ணன் ஆகியோரின் ஆட்சிக் காலங்களிலேயே வாழ்ந்துள்ளார். ஆதலின், இவர் காரியையும் அவன் மகன் திருக்கண்ணனையும் பாடினார் என்பது போதரும். ஆயினும் சோழனால் யானையின்கீழ் இடப்பெற்ற மலையமான் இவ னல்லன். அக்காலத்தில் அரசாளும் வயதினனாக இருந்த இத்திருக்கண்ணன், சோழனிடமிருந்து தப்பியிருத்தல் வேண்டும். சிறிது காலம் அரசனின்றி நாட்டு மக்கள் வருந்தினர். உரிய வாய்ப்புக் கிட்டியபின் நாடு திரும்பி ஆட்சிப் பொறுப்பினை இவன் மேற்கொண்டான் எனலாம்

பகை தவிர்த்தான்

கண்ணன் தன் தந்தையைப் போலவே பகையை வளர்த்துக்கொள்ளாமல், சோழனின் நட்பை நாடினன். அவனுக்குத் துணையானன். சோழிப ஏனுதி என்னும் பட்டமும் பெற்ருன். ஆதலின், இவன் சோழிய ஏனுதி திருக்கண்ணன் என்னும் பட்டமும் பெற்ருன். ஆதலின், இவன் சோழிய ஏனுதி திருக்கண்ணன் என்று அழைக்கப்பெறுகிருன். இவ்வாறு இவன் காலத்து நிகழ்ச்சிகளைக் கோவைப் படுத்திக் காண்பதே வரலாற்றுக்குப் பொருத்தமாகும்.

## தெய்விக மன்னன்

கடை ஏழு வள்ளல்களில் ஒருவனுன பாரி இறந்த பின்னர், அம்மன்னரின் நண்பரான கபிலர், பாரியின் மகளிரைத் தன்னேடு அழைத்துச் சென்று விச்சிக்கோவையும் இருங்கோவேளையும் அணுகி, அம்மகளிரை மணந்து கொள்ள வேண்டினர். இச்செய்தியைப் புறநானூற்றுப் [200, 201&202] பாடல்களின் வாயிலாக அறியலாம். அக்காலத்து மலையமன்னன் ஒருவனுக்கு அம்மகளிருள் ஒருத்தியை மணம் செய்வித்த செய்திக்குச் சங்க இலக்கியச் சான்றுகள் இல்லை. பிற்காலத்துத் தமிழ்நாவலர் சரிதை, மலையமன்னன் ஒருவன் பாரியின் மகளை மணந்ததாகக் கூறுகிறது. முதலாம் இராசராச சோழன் காலத்தில், திருக்கோவலூர் வீரட்டானேசுவரர்க் கோயிலில் வரையப் பெற்றுள்ள நீண்டதொரு கல்வெட்டில்,

"………பெண்ணை
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரி தனடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
யலைபுன லழுவத் தந்தரிக்ஷஞ் செல

மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது''

என்று கபிலர் பாரியின் பெண் ஒருத்தியை மலைய மன்ன னுக்கு உதவியதாகக் கூறுகிறது.8 தமிழ் நாவலர் சரிதையும் திருக்கோவலூர்க் கல்வெட்டும் இவ்வாறு கூறுவது, அக் காலத்தில் வழங்கிய செவிவழிச் செய்தியை அடியொற்றிக் கூறியதாகக் கொள்ள வேண்டும். இம்மலைய மன்னனைத் தெய்விக மன்னன் என்றும் கூறுவர். தமிழக வரலாற்றில் இப்பெயருடைய மன்னன் எவருமில்லை என்பது இங்கு உளங்கொளத் தக்கது. தெய்விகனின் திருமணத்திற்கு நெய்யும் பாலும் வேண்டுமென்று ஔவையார் பெண்ணை யாற்றை நோக்கிக் கீழ்க்காணும் பாடலைப் பாடினாராம்.9

''முத்தெறியும் பெண்ணை! முதுநீர் அது தவிர்ந்து
தத்திவரு நெய்பால் தலைப்பெய்து—குத்திச்
செருமலை தெய்வீகன் திருக்கோவ லூர்க்கு
வருமளவில் கொண்டோடி வா''

பெண்ணையாற்றிலும் அவ்வாறே நெய்யும் பாலும் வந்தன என்பர்.

''ஔவை பாடலுக்கு நறுநெய் பால்பெருகி அருந்தமி
ழறிவினால் சிறந்து
தெய்வமா நதிநீர் பரக்குநாடு அந்தத் திருமுனைப்பாடி
நன்னாடு''

என்று பிற்காலத்தில் வாழ்ந்த வரந்தருவாரும் இந்நிகழ்ச்சி யைக் குறிப்பிடுகிறார்.10 தெய்விக மன்னன் என்னும் பெயருடன் மலைய மன்னன் ஒருவன் இருந்தமைக்குச் சங்க இலக்கியச் சான்றுகளோ கல்வெட்டுச் சான்றுகளோ எவையுமில்லை. இவனைப்பற்றி வழங்கும் அனைத்து நிகழ்ச்சி களும் செவிவழிச்செய்திகளை மையமாகக்கொண்ட கற்பனை யாகவே இருத்தல்வேண்டும். அல்லது தலபுராணத்தை அடி யொற்றிக் கூறப்பெறும் செய்தியாகவும் இருத்தல் கூடும்.

எவ்வாறுயினும், மலையமான்களின் வரலாற்றில், தெய்விக மன்னனைப்பற்றிக் கூறும் செய்திகளுக்கு உரிய ஆதாரங்கள் இப்போதைக்கு இல்லை.

## குறிப்புகள்

1. The History of the Tamil, p. 509 —P. T. Srini vasa Iyangar & ஆரியப்படையும் யௌத்தெய கனமும் (கல்வெட்டுக் கருத்தரங்கு— 1966) பக்கம் 128-134, திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி
2. A History of South India, p. 122, prof- K.A. Neelakanda Sastri
3. கொங்கு நாட்டு வரலாறு,பக். 89 திரு மயிலை. சீனி. வேங்கடசாமி
4. கொங்கு நாட்டு வரலாறு(1972) பக்,80—திரு கோ. ம. இராமச்சந்திரஞ் செட்டியார்
5. தொண்டைமண்டல சதகம், பா. 36
6. A.R.E 1913, No. 38
7. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், பக். 18 -திரு வி. கனகசபை
8. S.I.I., vol. VII, No. 863
9. தமிழ் நாவலர் சரிதை, மே. பா. 55
10. வில்லிபுத்தூராழ்வார் பாரதம், பாயிரம்

# 3

## பல்லவர் காலம்

**[கி.பி. 550-903]**

### மெய்ப்பொருள் நாயனார்

பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்மவர்மன் காலத்துக்கு [கி.பி. 700-728] முன்பு வாழ்ந்த மலையமான்கள், பல்லவனின் ஆட்சிக்கு உட்படாமல் தனி ஆட்சியே நடத்தினர். பல்லவர் காலத்து மலையமான்களில் ஒரு சிலரைப் பற்றியே கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. அவர்களில் சிலரைப்பற்றி இப்பகுதியில் காண்போம்.

**சிவனடியார்**

இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். சிவனடியார்களின் கருத்தறிந்து அன்னோர்க்குத் திருத்தொண்டு செய்வதையே பெரும் பேறாகக் கருதியவர். மலையநாட்டு

மாமன்னர். திருக்கோவலூர் என்னும் பழம்பதி இவர் காலத்திலும் மலையநாட்டுத் தலைநகராகப் பொலிவு பெற்று விளங்கியது.

"சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாகர் அன்பின் வழிதரு மலாடர் கோமான்"

என்று சேக்கிழார் மெய்ப்பொருளாரின் மரபினைப் புலப் படுத்துகிறார். இவர் பேராற்றல் மிக்கபெருவீரர் என்பதைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் "வெல்லுமா மிகவல்ல மெய்ப் பொருளுக் கடியேன்" என்று சுட்டிக் காட்டுகிறார். வேத நன்னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு, காதலால் ஈசர்க்கன்பர் கருத்தறிந்து ஏவல் செய்பவராய் வாழ்ந்த மெய்ப்பொருள் நாயனாரின் வரலாறு, பெரிய புராணத்தில் விரிவாகக் கூறப் பெறுகிறது.

## முத்தநாதன்

முத்தநாதன் என்னும் சிற்றரசன் ஒருவன் இவருக்குப் பெரும் பகைவனாக விளங்கினான். பன்முறை போரிட்ட முத்தநாதன், இவரை வெல்லமாட்டாமல் தோற்றோடினான். ஒவ்வொரு முறையும் தனது படையை இழந்து வலி குன்றி னான். இறுதியில் சிவனடியார் போன்று வேடம் பூண்டு, நாயனாரை வஞ்சனையாகக் கொன்றான். அவ்வாறு செய்த முத்தநாதனைத் தத்தன் கொல்ல வந்தபோது நாயனார் அவனைத் தடுத்து நிறுத்தினார்.

"நிறைத்த செங்குருதி சோர வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படும் அளவில் தத்தா நமரெனத் தடுத்து வீழ்ந் தார்"

என்பர் சேக்கிழார். திருத்தொண்டர் திருவந்தாதியை இயற்றியருளிய நம்பியாண்டார் நம்பிகளும்,

"கற்றநன் மெய்த்தவன் போல்ஒரு
பொய்த்தவன் காய்சினத்தால்
செற்றவன் தன்னை அவனைச்
செறப்புக லும்திருவாய்
மற்றவன் தத்தா நமரே
எனச்சொல்லி வான்உலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு
ளாமென்று பேசுவரே"

என்று இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார். ஆக, நாயனாரின் சரித்தைக் கூறப்புகுந்தவர்களில் சுந்தரமூர்த்தி சாமிகள் நம்பியாண்டார் நம்பிகள், சேக்கிழாரடிகள் ஆகிய மூவரும் முக்கியமானவர்கள். இம்மூவருள் காலத்தால் முந்தியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளாவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இரண்டாம் நரசிம்மவர்மன் ஆட்சிக் [கி.பி. 690-720] காலத்தில் வாழ்ந்தவரென்றும், கி.பி. 790 முதல் 850 வரையிலான காலத்தில் வாழ்ந்தவரென்றும் பல கருத்துகள் நிலவுகின்றன.1 எனினும், கி.பி. 8 ஆம் நூற்றாண்டிலும் அவர் வாழ்ந்துள்ளார். என்பதில் ஐயமில்லை. எனவே, சுந்தரமூர்த்திகள் மெய்ப்பொருளாரைப் பற்றிய குறிப்புகளைத் தந்துள்ளமையால், இந்நாயனார் கி பி. 8ஆம் நூற்றாண்டுக்கு முன்பே வாழ்ந்தவர் என்று கொள்வதில் தடையில்லை.

சிவனடியார்களின் காலத்தை ஆராய்ந்த டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனார் அவர்கள், தமது பெரியபுராண ஆராய்ச்சி என்னும் நூலில், மெய்ப்பொருள் நாயனாரின் காலம் கி.பி 660 முதல் 840 வரை என்பர்2.

### மாந்தபருமர்

பல்லவ மன்னன் முதலாம் நரசிம்மவர்மனின் ஆட்சிக் காலத்தில் [கி.பி 630-668] வடார்க்காடு மாவட்டம் செங்கம் வட்டத்திலுள்ள மேற்கோவலூர் என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு, அப்பகுதியில் பொன்மாந்தனார் என்னும் குறுநில மன்னன் ஒருவன் ஆட்சி செலுத்தினான்.

இவனுடைய ஆட்சிப்பரப்பு தர்மபுரி மாவட்டத்திலுள்ள ளூத்தூர் வரைப் பரவியிருந்ததாகக் கூறுவர்.3 செங்கம் பகுதியில் கிடைத்துள்ள நடுகற்களைக் கொண்டு இம் மன்னனைப் பற்றிய செய்திகள் விளங்குகின்றன.4

இக்காலகட்டத்தில் பொன்மாந்தனாரின் நாட்டுக்குக் கிழக்கே மலையமான் நாடு அமைந்திருந்தது. இதன் தலை நகரம் திருக்கோவலூர். இதனைக் கீழ்க்கோவலூர் என்று நாம் குறிப்பிடலாம். மலையமான் நாட்டின் எல்லை வடார்க்காடு மாவட்டத்தின் சில பகுதிகளிலும் பரவியிருந்தமையை முன்னர்க் கண்டோம். அடுத்தடுத்து இருந்த இவ்விரு நாட்டு மன்னர்களும், முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் நட்பினராக இருந்திருத்தல் வேண்டும்.

## வாணகோ முத்தரைசன்

மேற்கோவலூரில் இருந்த மாந்தபருமரின் அண்ணன் மகன் ஒருவன்மீது போர் தொடுத்தான். அவ்வாறு போர் தொடுத்தவன் வாணகோ முத்தரைசன் என்று தண்டராம் பட்டில் கிடைத்துள்ள இரண்டு நடுகற்கள் கூறுகின்றன.5 இப்போரில் மாந்தபருமரே வெற்றி பெற்றார். ஒருவேளை இப் போரில் மேற்கோவலூர் மாந்தபருமர் தோல்வியடைந் தால், கிழக்கே இருந்த மலையமான் நாடும் தாக்குதலுக்கு உள்ளாகி இருக்கக்கூடும். அந்நிலை நேராவண்ணம், அப்போ திருந்த மலையமான் நாட்டு மன்னன், மாந்தபருமருக்குத் துணை நின்று, வாணகோ முத்தரைசனின் தோல்விக்குக் காரணமாக விளங்கினார் எனலாம்.

தன் சிறிய தந்தையிடம் தோல்வியுற்ற வாணகோ முத் தரைசன், தனது தோல்விக்கு ஒரு வகையிற் காரணமாக இருந்த மலையநாட்டின் மீது போர் தொடுக்க எண்ணினான். பன்முறைத் திருக்கோவலூர் மீது படையெடுத்தான். ஒவ் வொரு முறையும் தனது படையின் பெரும் பகுதியை இழந் தான்.

"பொன்னணி ஓடை யானை பொருபரி காலாள் மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப்
போனுன்"

என்று சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடும் போர் நிகழ்ச்சி இதுவாகவே இருத்தல் வேண்டும். வாணகோ முத்தரைசனை சுவாமிகள் முந்தநாதன் என்று குறிப்பிடுகிருர் போலும். அவ்வாருயின்: மேற்கோவலூர்ப் பகுதியில் மாந்தபருமர் ஆட்சி செலுத்தியபோது, கீழ்க் கோவலூரைத் தலைநகரா கக் கொண்டு மலையநாட்டில் ஆட்சி செலுத்தியவர் மெய்ப் பொருள் நாயனுராகவே இருத்தல் வேண்டும்.

## காலம்

மாந்தபருமருக்கும் வாணகோமுத்தரைசனுக்கும் நடை பெற்ற போர் நிகழ்ச்சி, முதலாம் நரசிம்மவர்மனின் 7ஆவ து ஆட்சி [கி. பி 637] ஆண்டிலேயே குறிக்கப்பெற்றுள்ளது. இப்போரில் மெய்ப்பொருளாருக்கும் தொடர்பிருத்தல் வேண்டுமென்று நாம் கருதுவதால், இந்நாயனுர் நரசிம்ம வர்மனின் தந்தையான முதலாம் மகேந்திரவர்மனின் ஆட்சிக் காலத்திலேயே பட்டத்திற்கு வந்திருத்தல் வேண்டும். ஆதலின், நாயனுர் வாழ்ந்த காலம் கி. பி. 590 முதல் 640 வரை எனக் கொள்ளலாம்.

"திருஞானசம்பந்தர் வாழ்ந்த காலத்துக்கும் சுந்தர மூர்த்தி சுவாமிகள் வாழ்ந்த காலத்துக்கும் இடைப்பட்ட காலத்திலேயே மெய்ப்பொருள் நாயனுர் வாழ்ந்தார்" என் னும் அறிஞர் திரு எம்.எஸ்.கோவிந்தசாமி அவர்களின் கருத் தும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

## முடிந்த முடிபன்று

திருத்தொண்டர் புராணம் இயற்றியளிய சேக்கிழாரடி கள், இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந் தவர் என்பது அறிஞர் பலரின் கருத்தாகும்.7 அம்மன்ன னின் ஆட்சிக் காலம் கி. பி. 1133—1150 என்பர். மெய்ப்

பொருள் நாயனுரோ முதலாம் மகேந்திரவர்மன் காலத்தவர். மகேந்திரவர்மனின் ஆட்சிக் காலம் கி.பி. 590—630 ஆகும். ஆதலின், நாயனுர் வாழ்ந்த காலத்துக்கும், சேக்கிழார் வாழ்ந்த காலத்துக்கும் ஏறத்தாழ 500 ஆண்டுகள் இடைவெளியுள்ளன. இந்நீண்ட கால கட்டத்தில் நாயனுரின் பகைவனுன வாணகோமுத்தரைசனின் பெயர் குறுகி, முத்தநாதன் என்று செவிவழிச் செய்தியாக வழங்கியிருத்தல் வேண்டும். இப்பெயரையே சுவாமிகள் தமது புராணத்தில் கூறினுர் எனலாம்.

சுவாமிகள் காலத்தில் மெய்ப்பொருள் நாயனுரின் இயற்பெயரும் மறைந்து போயிற்று. ஆதலின், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் நம்பியாண்டார் நம்பிகளும் குறிப்பிட்ட 'மெய்ப்பொருளார்' என்னும் காரணப் பெயரையே எடுத்தோதினுர். சேக்கிழார் கூறிய நாயனுர் ;வரலாற்றில், ஒரு குறுநில மன்னனின் ஆட்சி, நடைமுறை, அரசியல் ஒழுகலாறு முதலானவை, புனைந்துரை ஏதுமின்றி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கவையாகும்.

இவ்வாறு செங்கம் நடுகற்கள் கூறும் செய்திகளையும் பெரிய புராணம் கூறும் செய்திகளையும் ஒப்பிட்டு நாயனுர் வாழ்ந்த காலத்தை மேற்கூறியவாறு முடிவு செய்யலாம். எனினும், இது முடிந்த முடிபன்று. அறிஞர்கள் இதுபற்றி மேலும் ஆராய்ந்து முடிபு காண்பார்களாக!

## தத்தா நமரே

மெய்ப்பொருள் நாயனுர் காலத்தில் பல்லவப்பெரு வேந்தர்கள் சமணர்களின் செல்வாக்கினின்றும் விடுபட்டுச் சைவர்களாக மாறத் தொடங்கிய காலம். இக்கால கட்டத்தில் சைவராக வாழ்ந்த மெய்ப்பொருள் நாயனுரை முத்தரைசன் வஞ்சித்துக் கொன்றுன். இந்நிகழ்ச்சியைச் சைவ அடியார்கள் நாடெங்கும் பரப்பினர். இதன் விளைவாகப் பொதுமக்கள் இவ்வரலாற்றை நன்கு

அறிந்துகொள்ள. வாய்ப்புக் கிட்டியது. காலப்போக்கில் நாயனாரின் இயற்பெயர் மறைந்து 'தத்தா நமர்' என்று தடுத்து வீழ்ந்த நிகழ்ச்சியே மக்கள் மத்தியில் நிலைபெற்றது. கல்வெட்டுகளிலும் இவரை 'தத்தா நமர்' என்னும் பெயரா லேயே குறித்தனர். நாயனாரின் மரபினர் பலர், பிற்காலத் தில் அடிகள் என்று குறிக்கப்பெற்றனர். நாயனார் திருநீற்று அன்பராதலின், மலையமான்களில் சிலர் நீறேற்றான் நீரணிந்தான் என்றும் பெயர் பெற்று விளங்கினர்.

## நாயனார் படிமம்

சோழர் காலத்தில் மெய்ப்பொருள் நாயனாரின் படிமங்கள் பல கோயில்களில் நிறுவப்பெற்றன. முதலாம் இராசராச சோழன் காலத்தில், 'பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்தன் வேளான்' என்னும் அதிகாரி, தஞ்சைப் பெருவுடையார்க் கோயிலில் 'பாதாதி கேசாந்தம் இருபதிற்றுவிரல் உசரத்து இரண்டு கையுடையாராகக் கனமாகச் செய்த தத்தா நமரே காண் என்ற மிலாடுடையார் ஒருவரின்'' படிமம் அமைத்ததாகக் கல்வெட்டு கூறுகிறது.[8]

இக்கல்வெட்டுப் பகுதியில் 'தத்தா நமரேகாண் என்ற மிலாடுடையார்' என்று மெய்ப்பொருளார் குறிக்கப் பெறுவது இங்கு நினைவுகொள்ளத் தக்கது. தாராசுரம் இராசராசேச்சுரத்திலும் இந்நாயனாரின் சிற்பம் அமைந் துள்ளது. இங்கு நாயனாரை முத்தநாதன் வஞ்சனையாற் கொள்ளும் காட்சி சித்திரிக்கப் பெற்றுள்ளது. இதே காட்சி திருப்பனந்தாள், திருவொற்றியூர் ஆகிய இடங்களிலும் உள்ளது. இவ்வாறு சோழர் காலத்துக் கற்றளிகள் பலவற்றில் நாயனாரின் சிற்பம் இடம்பெற்றிருப்பது உளங் கொளத் தக்கது. முதலாம் ஆதித்த சோழனின் கல்வெட்டு ஒன்றில் மிலாடுடையார் பள்ளி கூறப்பெறுகிறது.[9]

## வாணகோவரையன் சித்தவடத்து அடிகள்

பல்லவ மன்னர்களின் ஆட்சிக் காலங்களிலேயே திருக்கோவலூர் மலையமன்னர்களுக்கும் ஆறகளூர்வாணகோவரையர்களுக்கும் நெருக்கமான தொடர்புகள் இருந்தன. பிற்காலத்தில் மலையமான்களும் வாணகோவரையர்களும் பேரரசர்களோடு மண உறவு கொண்டிருந்தனர். தமக்குள்ளும் கொள்வினை கொடுப்புவினை உடையவர்களாய் விளங்கினர்.

வாணகப்பாடி நாட்டின் ஆட்சி உரிமை பெற்ற சில மலையமான்கள், வாணகோவரையர் என்றும் குறிக்கப் பெற்றனர். வாணகோவரையர்களில் சிலர் மலையமான்கள் என்றும் அழைக்கப் பெற்றனர். இவற்றை உரிய இடத்தில் ஆங்காங்கே குறிப்பிடுவோம்.

மெய்ப்பொருளார் காலத்துக்குப் பிறகு, மலைய குலத்து மன்னர்கள், 'அடிகள்' என்று உயர்வாக மதிக்கப் பெற்றனர். திருக்கோவலூர் வீரட்டானமுடைய பரம சுவாமி இக்குலத்தினருக்குக் குல தெய்வமாக விளங்கினர். மலையகுலத்து மன்னர்கள் ஒவ்வொருவரும் இப்பெருமானுக்கு நிவந்தங்கள் பல செய்துள்ளனர்.

இரண்டாம் நந்தி வர்மப் பல்லவனின் ஆட்சிக் [கி. பி 730—795] காலத்தில் வாணகோவரையன் சித்தவடத்தடிகள் என்பவர், மலையநாட்டு மன்னராகத் திகழ்ந்தார். இவர் வாணகோவரையன் என்னும் பெயர் கொண்ட மலையர்குலத்து அரசராவர். இவருடைய தலைநகரம் திருக்கோவலூராகும். இவர் சிறந்த சிவநெறிச் செல்வராதலின் 'அடிகள்' என்று குறிக்கப் பெற்றார்.

### மாதேவடிகள்

வாணகோவரைய்ன் சித்தவடத்தடிகளின் மகளான மாதேவடிகள் என்பவர், சிவபெருமான் மாட்டு நிறைந்த ஈடுபாடு கொண்டவர். இவ்வம்மையார் மணலூர்ப்பேட்டைக்

காக்கா நாச்சியார் கோயில் இறைவனுக்கு திருவமுது படைக்சவும் நந்தாவிளக்கு எரிக்கவும் இரண்டு சிற்றூர்களைத் தேவதானமாக வழங்கியுள்ளார். அவற்றுடன் பொற்கொடையும் நல்கினர்.

திருக்கோவலூருக்கு வடமேற்கே 16 கி.மீ. தொலைவிலுள்ள மணலூர்ப்பேட்டைக் காக்கா நாச்சியார் மண்டபத்துக் கல்வெட்டு ஒன்றில், மேற்கூறிய செய்தி காணப்பெறுகிறது.10 இது பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மனின் 5ஆவது [கி. பி. 735[ ஆண்டில் வரையப்பெற்றதாகும். பல்லவர் காலத்து இக்கோயில் தற்போது இடிந்த நிலையில் உள்ளது. மணலூர்ப்பேட்டைக்குப் பிற்காலத்தில் கல்யாண மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்னும் பிறிதொரு பெயரும் இருந்துள்ளது. இதனைச் சித்தலிங்கமடம் கல்வெட்டு ஒன்றினல் உணரலாம்.11

## சித்தப்பட்டினம்

மணலூர்ப்பேட்டையுடன் இணைந்துள்ள வடக்குப்பகுதி சித்தப்பட்டினம் என்னும் பெயருடன் உள்ளது. இவ்வூர் வாணகோவரையன் சித்தவடத்து அடிகளின் பெயரால் திகழ்ந்த ஊராகும். சித்தவடம் என்பது அதன் பழைய பெயர். கி. பி. 17ஆம் நூற்றுண்டில் அங்கு மடம் ஒன்று இருந்தமையை அவ்வூர்க் கல்வெட்டு புலப்படுத்துகிறது.12

“ஒத்த வடத்திள நாக முருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையு முளைத்தெழ மூவிலை வேலும்
சித்த வடமும் அதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை”

என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தாலும், திருவதிகைப் பகுதியில் சித்தவடம் என்னும் பெயருடன் மடம் ஒன்று இருந்தமை புலனுகும். இதுவும் சித்தவடவர்களின் பெயரால் முற்காலத்தில் நிறுவப் பெற்றிருத்தல் வேண்டும். சித்தவட

மான்மியம் என்னும் பெயருடன் இரண்டு ஏட்டுச் சுவடிகள் உள்ளன. அவற்றுள் ஒன்று, ஆதி சிதம்பரேசர் பதிகம், சிவகாமியம்மை பதிகம், திருத்தொண்டர் பதிகம் என மூன்று பிரிவுகளை உடையது. இச்சுவடிகள் இன்னமும் அச்சாகவில்லை.13

திருவதிகைப் புறத்து சித்தவடத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் துயில்கொள்ளும்போது, சிவபெருமான் அவர் முடியின்மீது தமது திருவடியைச் சூட்டினார் என்பது வரலாறு.

## குறிப்புகள்

1. பன்னிரு திருமுறை வரலாறு, பாகம்-I, பக். 309—வித்துவான் திரு க. வெள்ளைவாரணனார் & சுந்தர மூர்த்தி சுவாமிகளின் காலம் (ஆராய்ச்சி, காலாண்டிதழ், ஏப்ரல் 1974, பக். 277) திரு A.V. சுப்பிரமணிய ஐயர்
2. பெரிய புராண ஆராய்ச்சி (1960), பக். 240—டாக்டர் மா. இராசமாணிக்கனார்.
3. முத்தரையர் (1976), பக். 34 — திரு. நடன காசி நாதன் M.A ,
4. செங்கம் நடுகற்கள் (1972), தொ.எ. 1971/124 & 100—டாக்டர் இரா. நாகசாமி
5. செங்கம் நடுகற்கள் (1972), தொ.எ. 1971/69&68—டாக்டர் இரா. நாகசாமி
6. The Role of Feudatories in Pallava History, P. 149—M.S. Govindasamy
7. சாசனத் தமிழ்க்கவி சரிதம் (1961), பக். 70—78—திரு மு. இராகவையங்கார்—The Colas, vol, II,

Part I, p. 76-Prof K. A. Neelakanda Sastry & A.R.E. 1912, Part-II, para-27

8. S.I.I., vol, II; No, 40
9. A.R.E: 1912, No, 137
10. A.R-E. 1937-38 No. 469.
11. A.R.E. 1909, No, 409
12. A:R.E. 1937-38, No: 462
13. உ.வே.சா. நூலகச் சுவடிகள், தமிழ் நூல் விவர அட்டவணை, தமிழ்ப் புத்தகம் வரிசை எண் 64.

4

# முற்பட்ட சோழர் காலம்
## [கி.பி. 846-1070]

### சேதிராயர்

விசயாலய சோழனின் ஆட்சிக் காலம் தொடங்கி, அதிராசேந்திர சோழனின் ஆட்சிக்காலம் வரையிலும் வாழ்ந்த மலையமன்னர்களைப் பற்றிய செய்திகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. இக்கால கட்டத்தில் வாழ்ந்த மலையமான்கள் பெரும்பாலும் மிலாடுடையார் என்றும், சித்தவடவர்கள் என்றும் அழைக்கப் பெற்றனர். இம்மன்னர்களுக்குப் பல்வேறு அபிடேகப் பெயர்களும் சிறப்புப் பெயர்களும் இருந்தன. இவர்கள் சமயவேறுபாடின்றி சைவ வைணவ சமணக் கோயில்களுக்கு நிவந்தங்கள் வழங்கியுள்ளனர். இக்காலத்தில் இருந்த மலைய மன்னர்கள் பலரும், மலையநாட்டின் பல்வேறு பகுதிகளைக் கூறிட்டு ஆண்டு வந்தனர்.

மலையமான் நாட்டை ஆண்ட குறுநில மன்னர்களில் சேதிராயரும் ஒருவர். இவர் இயற்றிய பாடல்கள் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் 9ஆம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன.

"ஏயு மாறெழிற் சேதிபர் கோன்தில்லை
நாய ஞரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் கத்திடை
ஆய இன்பம் எய்தி யிருப்பரே" பாடல். 10

என்னும் பாடலில் இவர் தம்மைச் சேதிபர்கோன் என்று கூறிக்கொள்வதினின்றும், இச் சேதிராயர் சேதிநாட்டு மன்னர் என்பது தெள்ளிதின் விளங்கும். செந்தமிழ்ப் புலமை மிக்க இவர் கி.பி 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படுகிறார்.[1]

டாக்டர் திரு மா. இராசமாணிக்கனார் அவர்கள் "இச்சேதிராயர் என்ற மலையமான்கள், சேதிராயர் என்னும் பட்டத்துடன் குலோத்துங்கற்கு முற்பட்ட கல்வெட்டுகளிற் குறிக்கப்பட்டிலர். ஆயின், முதற் குலோத்துங்கன் காலம் முதல் பிற்பட்ட ஒவ்வொரு சோழ அரசன் காலத்துக் கல்வெட்டுகளிலும் தவறாது சேதிராயர் என்று குறிக்கப்படுகிறார். இதனைக் காண நம் சிவனடியாரான சேதிராயர் முதற் குலோத்துங்கன் காலத்தவர் அல்லது பிற்பட்ட காலத்தவர் ஆவரேயன்றிக் குலோத்துங்கன் காலத்திற்குச் [கி.பி 1070–1120[ சிறிதும் முற்பட்டவர் ஆகார்" என்று கூறுவர்.[2]

கி.பி 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஒவ்வொரு மலையமானும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றனர். இவர்களில சிலர் திருக்கோவலூர், கிளியூர், இறையூர், எலவானாசூர், கூகூர், மாரீங்கூர், சித்தலிங்கமடம், ஆடையூர் முதலான ஊர்களில் இருந்து மலைய நாட்டின் பல்வேறு பகுதிகளை ஆண்டுள்ளனர்.

சேதிராயரும் மெய்ப்பொருள் நாயனாரைப் போல சிவனடியாராகவும் மன்னராகவும் திகழ்ந்தவர். இவர் கி.பி 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்திருப்பாரேயானால், இவரைப் பற்றிய கல்வெட்டு ஒன்றேனும் கிடைத்திருக்க வேண்டும். குறிப்பாக மலையமன்னர்களுக்குக் குலதெய்வ மாக விளங்கும் கோவலூர் வீரட்டானமுடையார்க்கு, இவர் நிவந்தங்கள் வழங்கி இருத்தல் வேண்டும். இதுகாறும் கிடைத்துள்ள மலையமான்களைப் பற்றிய கல்வெட்டுக் குறிப் புகளில் எவையும் சேதிராயரைக் குறிப்பிடவில்லை. எனவே; இவர் அக்கால கட்டங்களில் வாழ்ந்தவராகக் கொள்ள இயலாது.

## சேதிமாதேவியார்

இனி, மிலாடுடையார் சித்தவடத்து அடிகள் என்பவர் உத்தம சோழ தேவரின் ஆட்சிக் காலத்தில் [கி.பி 970-985] வாழ்ந்த மலையநாட்டு மன்னராவார். இவர் மனைவியார் சேதிமாதேவியார் என்றும், இவ்வம்மையார் திருப்பழனம் திருச்சத்துறை திருப்பூந்துருத்தி ஆகிய ஊர்களிலுள்ள சிவன் கோயில்களுக்கு விளக்குத் தானமாக ஆடுகள் வழங்கி யுள்ளார். 3 ஆதலின், சேதிமாதேவி, சேதிநாடு, சேதிராயர் முதலான பெயர் வழக்கம் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்துக்கு முன்பு முற்றிலும் இல்லை என்று கூறுதற்கில்லை. சேதிமாதேவியார் 10ஆம் நூற்றாண்டினர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அன்றியும் சேதிராயர் தம்மைச் சேதிபர்கோன் என்று கூறிக்கொள்வதைச் சேதிராயர் என்னும் பெயராகக் கொள்ள இயலாது. அக்காலத்தில் இத்தகு பெயர்கள் அருகி வழங்கியுள்ளன என்றே கொள்ள வேண்டும். 4 முதலாம் குலோத்துங்க சோழன் காலத் துக்கு முன்னர் வாழ்ந்த மலையமன்னர்களில் சிலர், சேதிபர் என்னும் பெயருடன் இருந்தமையால், அவர் தம் மனைவியர் சேதிமாதேவியார் என்று அழைக்கப் பெற்றனர் எனலாம்.

எனவே, முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திலும், அம்மன்னனுக்குப் பிற்பட்ட காலத்திலும் எழுந்த கல்வெட்டுகளில், திருவிசைப்பா அருளிய சேதிராயரைப் பற்றிய குறிப்புகள் இல்லாமையாலும், முற்பட்ட சோழர் கல்வெட்டுகளில் சேதிமாதேவி என்னும் பெயர்கள் வழங்கியுள்ளமையாலும் இச்சிவனடியார் கி.பி 10ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவராகக் கொள்ளலாம்.

## கிளியூர் பெருமானர்

இவர் முதலாம் பராந்தகச் சோழனின் ஆட்சிக் [கி.பி 907–953] காலத்தில் வாழ்ந்த மலையமன்னர். இவர் கிளியூர் பெருமானர், மிலாடுடையார் கயிறூர்ப் பெருமானர், மிலாடுடையார் எனப் பலவாறு அழைக்கப் பெற்றார். கிளியூரை இருப்பிடமாகக் கொண்ட முதல் மலைய மன்னர் இவராகவே இருத்தல் வேண்டும். இவரின் வழித் தோன்றல்கள் பிற்காலத்தில் கிளியூர் மலையமான் என்னும் அடைமொழியோடு குறிக்கப் பெற்றனர்.

### சத்திநாதன்

இதே கால கட்டத்தில் சத்திநாதன் என்னும் பிறிதொரு மலையமன்னன், திருக்கோவலூரில் இருந்து மலைய நாட்டின் மற்றொரு பகுதியை ஆண்டுவந்தான். இவனே முதலாம் நரசிம்மவர்மன். கிளியூர் பெருமானரும் இவனும் தாயத்தினர். ஆதலின், இவ்விருவரும் மலையநாட்டின் வெவ்வேறு பகுதிகளில் இருந்து கொண்டு ஆட்சி செலுத்தினர்.

பெருமானரின் கிளியூர், திருக்கோவலூரிலிருந்து தென்கிழக்கே 10 கி.மீ. தொலைவில் உள்ளது. இன்று அது சிற்றூராகக் காட்சியளிக்கிறது. இக்காலத்தில் அங்குப் பழமைச் சுவடுகள் எவையுமில்லை.

### கொடைகள்

கிளியூர் பெருமானாரின் மகளான ராஜதேவியார்தேசா தக்கிபெருமானார் என்பவர், திருக்கோவலூர் வீரட்டான முடையார்க்கு நந்தா விளக்கு எரிக்கும் பொருட்டு, கி.பி 935 ஆவது ஆண்டில் 100 ஆடுகளைத் தானமாக வழங்கி யுள்ளார். 5 இக்கால கட்டத்தில் வாழ்ந்த இராசாதித்திய மலையன் என்பவனும், திருநாமநல்லூர்த் திருத் தொண்டீஸ் வரமுடையார்க்கு விளக்குத் தானமாக 100 ஆடுகள் வழங் கினான். 6

முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் வீரசோழ மிலாடுடையான் என்னும் மன்னன் ஒருவனும் மலைநாட்டை ஆண்டுள்ளான். 7 இம்மன்னனைப் பற்றிய வேறு குறிப்பு எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை.

## முதலாம் நரசிம்மவர்மன்

நரசிம்மவர்மன் எனனும் பெபருடன் இரண்டு மலைய மன்னர்கள் வாழ்ந்தவர். அவ்விருவருள் இவன் முதலாமவன். இம்மன்னன் முதலாம் பராந்தகச் சோழன் ஆட்சியின் இறு திப் பகுதியிலிருந்து உத்தம சோழன் ஆட்சியின் தொடக்கப் பகுதி வரையிலும் இருந்துள்ளான்.

இவனுக்குச் சந்திரநாதன், சித்தவடவன் மிலாடுடையார், சித்தவடத்து அடிகள், சாமுண்ட தேவன் முதலான பெயர் களும் அக்காலத்தில் நிலவின. நரசிம்மவர்மன் என்பது இவ னுடைய அபிடேகப் பெயராகும். கோவல் ஆள்வோன், மலைய குலோத்பவன் என்றும் இவன் புகழப் பெறுகிறான். மலைய மான்களில் பார்கவ கோத்திரநாதான் என்று குறிக்கப்பெறும் முதல் மன்னன் இவனே. இவனுக்குப் பின்னர் வேறு சில ரும் இவ்வாறு குறிக்கப்பெற்றனர்.

### வீரசோழபுரப் போர்

முதலாம் பராந்தகன் சோழநாட்டுப் பேரரசனாக வீற் றிருந்த காலத்து, இராஷ்டிரகூட மன்னனான மூன்றாம்

கிருஷ்ணன் கி.பி 949 ஆம் ஆண்டில் சோழ நாட்டின் மீது படையெடுத்து வந்து தொண்டை மண்டலத்தையும் திருமுனைப்பாடி நாட்டையும் கைப்பற்றிக்கொண்டான்.9

இக்காலத்தில் நரசிம்மவர்மன் மலையமன்னனாக விளங்கினான். இவன் சோழ மன்னனுடன் நெருங்கிய நட்புக் கொண்டு விளங்கியமையால், இராஷ்டிர கூடரின் படை மலைய நாட்டையும் தாக்கியது. இருதிறத்துப் படைகளும் வீரசோழபுரம் என்னும் இடத்தில் போரிட்டன. இப்போரில் சோழப் பெரும்படை நரசிம்மனுக்குத் துணையாக நின்றிருத்தல் வேண்டும். ஆதலின், இவனே வெற்றி பெற்றான், இப்போர் கி.பி. 952க்கு முன்பே நிகழ்ந்திருத்தல் வேண்டும். ஏனெனில், இவன் கி.பி. 952 ஆம் ஆண்டிலும் பராந்தகனின் மகனான கண்டராதித்த சோழனுக்கு அடங்கி ஒழுகிய மன்னனாகவே இருந்துள்ளான்.

வீரசோழபுரப் போரில் இவன் யாருடன் போரிட்டான் என்பதைச் சாசனம் கூறவில்லையாயினும், இரட்டரோடு போரிட்டான் என்றே கொள்ள வேண்டும். இப்போருக்குப் பின்னர் நரசிம்மவர்மனைக் "கோவல் ஆள்வோன், தமிழர்க் காவலன், பகைவர்க்கு அச்சம் தருபவன், வீரசோழபுரப்போரில் தன் பகைவர்களைப் புற முதுகு காட்டி ஓடச் செய்தவன், தன் தோள்வலியால் பகைவர்களின் காளைகளைக் கவர்ந்தவன்" என்றெல்லாம் கல்வெட்டுகள் புகழ்ந்து பேசுகின்றன,10

வீரசோழபுரப்போரில் இவன் வெற்றி பெற்றானாயினும், பின்னர் நடந்த போர்களில் தோல்வி எய்தி இரட்டனுக்கு அடிமையானான். இதன் பின்னர் இரட்டனைத் தனது அரசனாக ஏற்றுக் கொண்டான். திரு நாமநல்லூரிலுள்ள கன்னரதேவனின் 17 ஆவது ஆண்டுக் [கி.பி 957] கல்வெட்டில், இவன் அளித்த தானங்கள் குறிக்கப் பெறுவதால் இதனை உணரலாம். அக்கல்வெட்டாவது —

"ஸ்வஸ்திஸ்ரீ கன்னர தேவர்க்கு யாண்டு பதினேழாவது முனைப்பாடித் திருநாவலூர்த்

திருத்தொண்டீஸ்வரத்து மஹாதேவர்க்கு ஸ்வஸ்தி சுக்ரான்வய உதயாசல ஆதித்ய சக்திநாத சிம்ஹத்வஜ சிகிமகர லாஞ்சன மலைய குலோத்பவ மலையகுல சூளாமணி ஸ்ரீமத்நரஸிம்ஹ வர்ம மிலாடுடைய நாட்டான் சித்தவடவன் ஆகிய நரஸிம்ஹவன்மன் வைத்த நொந்தா விளக்கொன் றினுக்கு வைத்த பொன் பதின் கழஞ்சு இப்பொன் பதின் கழஞ்சுங் கொண்டு வெண்ணெய் நல்லூர் நாட்டுச் செவலை சபையோமும் ஊரோமும் ஆட்டு நூற்று நாழி நெய் கொடு வந்து மாதேவியாலே ஸந்திராதித்யவல் அட்டுவோம் ஆனோம் செவலை சபை ஊரோம் ஈழவிளக்கு ஒன்று இது பன்மா ஹேஸ்வர இரக்ஷை.''11

## ஸ்ரீவிக்கிரமாதித்தன்

வைதும்ப அரசனான ஸ்ரீவிக்கிரமாதித்தன் என்பான் மலாடு, வாணகப்பாடி, சிங்கபுர நாடு, வெண்குன்றக் கோட்டம் ஆகிய நாடுகளைக் கன்னரதேவனின் அரசப் பிரதிநிதியாக இருந்து ஆண்டு வந்தான். இச்செய்தியைக் கிராமம் என்னும் ஊரிலுள்ள கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.12 ஆதலின், நரசிம்மவர்மன் தோல்வி எய்திய சிறிது காலத்திற்குப் பின்னர், மலையமான்நாடு விக்கிரமாதித்தனின் ஆளுகைக்கு உட்பட்டது எனலாம்.

## சேதிமாதேவியார்

தஞ்சை மாவட்டம் திருப்பழனம் ஆபத்சகாயேச்சுரர்க் கோயிலில் வரையப்பெற்றுள்ள உத்தமசோழ தேவரின் 11 ஆவது ஆண்டுக் [கி.பி. 981] கல்வெட்டில், மிலாடுடையார் சித்தவடத்து அடிகள் என்னும் மலைய மன்னர் ஒருவர் குறிக்கப்பெறுகிறார். இம்மிலாடுடையார் நரசிம்மவர்மராகவே இருத்தல் வேண்டும். சேதிமாதேவியார் என்பவர் இவரின் மனைவியாவார். இவ்வம்மையார் திருப்பழனம், திருச்சத்

துறை, திருப்பூந்துருத்தி ஆகிய ஊர்களிலுள்ளசிவன்கோயில் களுக்கு விளக்கெரிக்கத் தானங்கள் வழங்கியுள்ளார்.13

இரண்டாம் பராந்தகனுன சுந்தரசோழனின் 6ஆவது ஆட்சி ஆண்டுக் [கி.பி 961-62] கல்வெட்டு ஒன்று அண்மை யில் கண்டறியப்பெற்றது. அது வடார்க்காடு மாவட்டம், திருமலை என்னும் ஊரில் சந்திரபிரபு சுவாமி கோயிலில் [சமணக்கோயில்] இடம் பெற்றுள்ளது. அக்கல்வெட்டு சித்தவடவன் மனைவி ஏகவீரன் தன்மசங்கடியார் என்று கூறு கிறது.13a இவ்வம்மையார் நாடாள்வார் இளங்கோவடி களாரின் மகளாவார். இவரே மேற் கூறிய சேதிமா தேவியாக இருத்தல் வேண்டும்.

## மிலாடுடையார் மகள்

முதலாம் இராசராச சோழனின் 3 ஆவது ஆண்டில் (கி.பி 988) வரையப் பெற்ற திருவிசலூர்க் கல்வெட்டில், உத்தம சோழ தேவரின் மனைவி அவ்வூர்ச்சிவன் கோயிலுக்கு இறையிலி நிலக் கொடை வழங்கிய செய்தி காணப்பெறு கிறது.14 இவ்வம்மையார் மிலாடுடையார் மகள் என்று குறிக்கப்பெறுகிருள்.

அக்காலத்தில் சோழப் பேரரசன் ஒருவன் பெண் கொள்ளத்தக்க பெருஞ் சிறப்புக்குரியவனுக விளங்கியவன் நரசிம்மவர்மனே யாவன். ஆதலின், உத்தமசோழ தேவரின் மனைவியை நரசிம்மவர்மனின் மகளாகக் கொள்வதில் தவறில்லை.

## கொடைகள்

நரசிம்மவர்மன் தனது ஆட்சிக் காலத்தில் சிவன் கோயி லுக்கும் சமணக் கோயிலுக்கும் சமய வேறுபாடு இன்றி நிவந்தங்கள் வழங்கியுள்ளான். ஆதலின், இவன் சமயப் பொறை யுடையவன் என்பது வெளிப்படை.

திருநாவலூர்த் திருத்தொண்டீச்சரத்து மகாதேவர்க்கு விளக்கெரிக்க இவன் பதின் கழஞ்சு பொன்னை மூலதனமாக வைத்த செய்தி முன்னரே விளக்கப்பெற்றது. சோழ வாண்டிபுரத்து ஆண்டி மலையில் செதுக்கப் பெற்றுள்ள பத்மாவதியம்மன், கோமதீச்சரர், பார்சுவநாதர், மகா வீரர் ஆகிய சமணத் திருமேனிகளுக்கு, பணைப்பாடி என்னும் சிற்றூரைத் தானமாக வழங்கியுள்ளான். இது அங்குள்ள சாசனம் ஒன்றினால் புலனாகும்.15

## விக்கிரம சோழ மிலாடுடையார்

விக்கிரம சோழ மிலாடுடையார் முதலாம் இராசராச சோழனின் ஆட்சிக் [கி.பி 985–1014] காலத்தில், அம்மன்ன னுக்கு அடங்கி ஒழுகிய மலைய மன்னர்களில் ஒருவர். இவர் பார்கவ கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்று சாசனம் குறிப் பிடுகிறது.

இவருக்கு இராமன் சித்தவடவன், இராம தேவன் சித்த வடவன், மிலாடுடையார் இராமன் நாட்டடிகள் முதலான வேறு பெயர்களும் உண்டு. முதலாம் நரசிம்மவர்மன் இராஷ்டிர கூட மன்னனிடம் இழந்த மலையநாட்டுஆட்சி உரிமை, இக் கால கட்டத்தில் இம்மிலாடுடையாரிடம் வந்துவிட்டது. இவன் முதலாம் இராசராச சோழனின் அம்மானாகஇருத்தல் வேண்டும் என்று கருதப்பெறுகிறான்.16

## புளிசய்யன்சாமி அப்பை

புளிசய்யன்சாமி அப்பை என்பவள் விக்கிரம சோழ மிலாடுடையாரின் மனைவியாவார். மலாடமாதேவியார் என் றும் இவள் அழைக்கப் பெற்றாள். இத்தேவியார் பாண்டிய அரசன் ஒருவனின் மகள் என்று கல்வெட்டுக் கூறுகிறது. இராசராச சோழன் காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னர் கள் அனைவரும், அம்மன்னனுக்குத் திறை செலுத்தும் அரசர்களாகவே விளங்கினர். அப்பாண்டியர்களில் இவ் வம்மையார் யாருடைய மகள் என்பதை அறிய இயலவில்லை.

இரண்டாம் பராந்தகனுன சுந்தர சோழனின் மனைவியருள் ஒருத்தியான வானவன்மாதேவி என்பவள்,17 இவ்விக்கிரம சோழமிலாடுடையாரின் மகளாக இருத்தல் வேண்டும்.

இராசராச சோழனின் 5ஆவது [கி.பி 990] ஆண்டில், புளிசய்யன் சாமி அப்பை திருக்கோவலூர் வீரட்டான முடையார்க்கு நந்தா விளக்கு எரிக்க 96 ஆடுகளை முதற் பொருளாக வழங்கியுள்ளாள்.18

## கொடைகள்

விக்கிரம சோழமிலாடுடையார் தமது ஆட்சிக் காலங் களில் பல்வேறு சிவன் கோயில்களுக்கு நிவந்தங்கள் வழங்கி யுள்ளார். திருவாமாத்தூருடைய பரமசுவாமிக்கு விளக் கெரிக்க 96 ஆடுகளையும், கோவலூர் வீரட்டானமுடை யார்க்கு விளக்குத்தானமாக 12 பொற்காசுகளையும் மூலதன மாக வழங்கிய செய்திகள் ஆங்காங்கே உள்ள கல்வெட்டு களால் புலனுகின்றன.19

## படைத் தலைவர்கள்

விக்கிரம சோழ மிலாடுடையார் காலத்தில் 'வெண்மா னுடைய நீலன் மாதேவனுன மலையர் பீமமிலாடப் பேரரையன்' என்பவன் அரசு அதிகாரியாகவும், படைத் தலைவனுகவும் விளங்கினுன். இவன் மனைவி பரதானி என்பவள், வீரட்டா னத்தார்க்கு வழங்கிய விளக்குத் தானம்பற்றிக் கல்வெட்டு ஒன்று குறிக்கிறது.20

இம்மிலாடுடையாரின் தாயத்தினர் பலர், மலையநாட்டு நிர்வாகத்தில் பங்கு பெற்றுப் பாடி காவல் அதிகாரி களாகவும், சிறந்த படை முதலிகளாகவும் இருந்தனர். அவர் களில் உத்தம சோழ மிலாடுடையார் குறிப்பிடத்தக்கவர். இவரைப் பற்றிய செய்திகள் அடுத்து வரும் பகுதியில் விளக்கப் பெறும்.

## உத்தமசோழ மிலாடுடையார்

மலையராதித்தனை ஆவியூர் சேதிநாட்டு வேளான் என்னும் அதிகாரி ஒருவனின் வேண்டுகோளுக் கிணங்கி, உத்தமசோழ மிலாடுடையார் கொடை வழங்கிய செய்தி யொன்று கல்வெட்டில் காணப் பெறுகிறது.[21] அதி காரியின் வேண்டுகோளுக் கிணங்கிக் கொடை வழங்கும் உரிமை மன்னர்களுக்கே உரித்தானது. ஆதலின், விக்கிரம சோழ மிலாடுடையார்க்குப் பின்னர், மலாட்டு மன்னர் களில் வலிமையுடைய் மன்னராக விளங்கியவர் உத்தம சோழ மிலாடுடையார் ஆவர். இவர் முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன் ஆகியோர் காலங்களில் வாழ்ந்தவர்.

பார்கவ கோத்திரத்து பராந்தக யாதவ பீமனை உத்தம சோழ மிலாடுடையார் என்று இவரைக் கல்வெட்டுகள் குறிப் பிடுகின்றன.[22] பராந்தக யாதவ பீமன் என்பது இவ ருடைய இயற்பெயர். உத்தம சோழமிலாடுடையார் என்பது இவருடைய பட்டப் பெயர்.[23]

இம்மிலாடுடையார் முதலாம் இராசேந்திர சோழனின் மருமகனாகிய இராசராசநரேந்திரனுக்கு உதவி புரியும் பொருட்டு வேங்கி நாடு சென்று, கலிதிண்டி என்னும் இடத் தில் மேலைச் சாளுக்கியரோடு போரிட்டு இறந்தான். இவரோடு சென்ற இராசராசபிரமமாராயன், உத்தம சோழ சோழகோன் ஆகியோரும் அவ்வாறு உயிர் துறந்தனர். இம் மூவருக்கும் அங்குப் பள்ளிப் படைக் கோயில்கள் நிறுவப் பெற்று நரேந்திரனால் நிவந்தங்களும் விடப் பெற்றன.[24] ஆதலின், உத்தமசோழ மிலாடுடையார் கி.பி.1035 ஆவது ஆண்டில் இறந்து போனார் என்பது திண்ணம்.

இவர் தொடக்க காலத்தில் விக்கிரம சோழ மிலாடுடை யாரிடம் அகம்படனாக இருந்து பயிற்சி பெற்றவர். இதனை எலவானாசூரிலுள்ள சிதைந்த சாசனம் ஒன்று குறிப்பால் உணர்த்துவதைக் காணலாம். இது முதலாம் இராசராச

சோழன் காலத்தில் வரையப் பெற்றமை குறிப்பிடத் தக்கது.25

## கணபதி மயிலாடி

உத்தமசோழ மிலாடுடையாரின் மனைவி கணபதி மயிலாடி என்னும் பெயரினை உடையவள். இவ்வம்மையார் கி.பி. 1027 ஆவது ஆண்டில், கோவலூர் வீரட்டானமுடையார்க்கு நாள்தோறும் உழக்கு நெய் பெய்து நந்தா விளக்கு எரிக்க நிலக்கொடை வழங்கினாள்.26

## அறச்செயல்கள்

உத்தமசோழ மிலாடுடையார் தமது வாழ்நாளில் திருக்கோவலூர், எலவானாசூர், திருப்பத்தூர் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களுக்குப் பல்வேறு அறக்கட்டளைகளை நிறுவினார்.

இறையானரையூர் (எலவானாசூர்) ஊர்பாகங்கொண்ட மகாதேவர்க்கு நாள்தோறும் திருவமுது படைக்க, நல்லரைசூர் என்னும் இடத்தில் 9818½ குழி அளவுள்ள நிலங்களை 120 காசுகளுக்கு விலைக்கு வாங்கித் தானமாக வழங்கினார். அவற்றுடன் நாள்தோறும் பாலும் நெய்யும் கிடைக்க 120 பசுக்களையும் கொடுத்தார்.27

முதலாம் இராசேந்திர சோழனின் 6ஆவது [கி.பி. 1018] ஆண்டில், திருக்கோவலூர் வீரட்டானத்துப் பெருமானுக்குச் சொந்தமான நிவந்தப் பொருட்கள் கணக்கிடப் பெற்றன. அவற்றில் உத்தமசோழ மிலாடுடையார் வழங்கிய பொன்னாலான மடல் ஒன்றும் இருந்ததாகக் கல்வெட்டுக் கூறுகிறது.28

"பராந்தகன் யாதவ பீமனான உத்தம சோழ மிலாடுடையான் இட்ட பொன்னின் மடல் இராஜராஜன் காசுக் கல்லால் நிறைபொன் இருபத்து ஒரு கழஞ்சரையினால் மடல் ஒன்றும்" என்பது அக்கல்வெட்டுப் பகுதியாகும்.

திருப்பத்தூர் ஐயனுர் கோயிலில், ஐயனுர் திருமேனி யின் பீடத்தில் உள்ள இராசேந்திர சோழனின் கல்வெட்டு ஒன்றிலும் இம்மிலாடுடையாரின் கொடை குறிக்கப் பெற்றுள்ளது.29 அக்கல்வெட்டு சிதைந்துள்ளமையின் அக் கொடை பற்றித் தெளிவாக அறிய இயலவில்லை.

## இராசேந்திரசோழ மிலாடுடையார்

உத்தமசோழ மிலாடுடையார் காலத்தில் இருந்த மலைய மன்னர்களில் இராசேந்திர சோழ மிலாடுடையாரும் ஒருவர். இவர் மலைய நாட்டின் மற்றெரு பகுதியில் ஆட்சி செலுத்திஞர். முதலாம் இராசேந்திர சோழனுக்கு அடங்கி ஒழுகிய இவர், உத்தமசோழ மிலாடுடையாரின் தாயத்தினர் ஆவார். இவருக்கு இராமன் மும்முடிச்சோழன் என்ற பிறி தொரு பெயரும் இருந்துள்ளது.

### பெற்ரேர்

இராசேந்திர சோழ மிலாடுடையாரின் தந்தை பட்டா லகன் இராமனுன அருமொழிதேவ மிலாடுடையார் என்றும், தாய்இராசசேகரன் உமை நங்கையார் என்றும் சாசனம் ஒன்று குறிப்பிடுகிறது.30 இம்மிலாடுடையார்க்கு இராமன் மருவடிகளான முடிகண்ட சோழ மிலாடுடையார் என்றெரு இளவல் இருந்ததாகப் பிறிதொரு கல்வெட்டு உணர்த்து கிறது.31

### நிவந்தங்கள்

இராசேந்திர சோழ மிலாடுடையார் திருக்கோவலூர் வீரட்டானமுடைய மகாதேவர்க்குக் கீழ்க்கண்ட நிவந்தங் களைச் செய்துள்ளார். இவற்றை அங்குள்ள சாசனங்கள் புலப்படுத்துகின்றன.32

தன் தாயான இராசசேகரன் உமை நங்கையாரின் நன்மையைக் கருதி கி.பி. 1015 ஆவது ஆண்டில் நந்தா

விளக்கு எரிக்க 100 ஆடுகளை வழங்கியுள்ளார். கி.பி. 1018 ஆவது ஆண்டில் பொன்னாலான தட்டம் ஒன்று நல்கினர். கி.பி. 1020 ஆவது ஆண்டில் மூன்று சந்தியும் திருவமுது படைக்க 96 பசுக்களைக் கொடுத்தார்.

## முடிகொண்ட சோழ மிலாடுடையார்

இவர் அருமொழிதேவ மிலாடுடையார்க்கு இராச சேகரன் உமை நங்கையின்பாற் பிறந்தவர். இராசேந்திர சோழ மிலாடுடையாரின் இளவல் ஆவார். இராமன் மருவடி யான் என்ற சிறப்புப் பெயரும் இவருக்கு வழங்கி வந் துள்ளது.

இம்மலைய மன்னனைப் பற்றிய செய்திகளை இரண்டு கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன.33 அவற்றுள் இராசேந்திர சோழனின் 6ஆவது [கி.பி 1018] ஆண்டில் கோவலூர் வீரட்டானமுடையார்க்கு இம்மன்னன் பொற்கை ஈச்சோப்பி ஒன்று வழங்கியதைக் குறிப்பிடும் கல்வெட்டு சிறப்புக்குரியது. இவ்வரசனைப் பற்றிய விரிவான வர லாற்றை அறிந்து கொள்ளப் போதிய சான்றுகள் கிடைக்க வில்லை.

## செம்பியன் மிலாடுடையார்

இராசேந்திர சோழன் காலத்தில் வாழ்ந்த மலைய குல மன்னர்களில் செம்பியன் மிலாடுடையாரும் ஒருவர். அகளங்கன் மலையராதித்தன் என்ற வேறு பெயரும் இவருக்கு உண்டு. இவர் கோவலூர் வீரட்டானத்தார்க்கு இரண்டு நந்தா விளக்குகள் எரிக்க 192 ஆடுகளை முதற் பொருளாக வழங்கினர். இது இராசேந்திர சோழனின் 2ஆவது [கி.பி. 1014] ஆண்டிலேயே கொடுக்கப் பெற்ற கொடையாகும்.34 இப்போதைக்கு இம்மன்னனைப் பற்றி விரிவாக அறிய இயலவில்லை.

## கங்கைகொண்ட சோழ மிலாடுடையார்

இராசேந்திர சோழன் காலத்து மலையமான்களில் இவர் குறிப்பிடத் தக்கவர். இவரைப் பற்றிய செய்தி ஒரேயொரு கல்வெட்டில்தான் காணப்பெறுகிறது. அதுவும் ஆந்திர மாநிலத்தில் உள்ள திருக்காளத்தி காளத்தீஸ்வரர்க் கோயிலில் உள்ளது. இராசேந்திர சோழனின் 12ஆவது ஆண்டில் [கி.பி 1024] வரையப் பெற்ற அக்கல்வெட்டு, கங்கை கொண்ட சோழ மிலாடுடையார் காளத்திப் பெருமான் கோயிலில் கார்த்திகை தீப விழாவுக்குப் பொன்னும், நந்தா விளக்கு எரிக்க 90 ஆடுகளையும் வழங்கியதைக் குறிக்கிறது.35

இராசேந்திர சோழனின் வடநாட்டுப் படையெடுப்பின் போது, அம்மன்னனுக்கு அடங்கி ஒழுகிய குறுநில மன்னர்களில் சிலர் தானத் தலைவர்களாகச் சென்றனர். அவ்வாறு சென்றவர்களில் கங்கை கொண்ட சோழ மிலாடுடையாரும் ஒருவராக இருத்தல் வேண்டும். வடநாட்டுப் படையெடுப்பில் வெற்றி வாகை சூடி மீளுங்காலத்து, திருக்காளத்தித் தேவருக்கு இவர் இக்கொடையை வழங்கியிருத்தல் கூடும். வடநாட்டு வெற்றிக்குப் பின்னரே இராசேந்திர சோழன், கங்கை கொண்ட சோழன் என்னும் சிறப்புப் பெயரைப் பெறுகிறான்.

கங்கை கொண்ட சோழன் என்னும் இராசேந்திர சோழனின் சிறப்புப் பெயரை இம்மிலாடுடையான் தாங்கியிருப்பதையும், வடக்கேயுள்ள திருக்காளத்தியில் இவனைப் பற்றிய கல்வெட்டு காணப் பெறுவதையும் கருத்திற் கொண்டு மேற்கூறிய முடிவுக்கு வருகிறோம்.

## இரண்டாம் நரசிம்மவர்மன்

இவன் இரண்டாம் இராசேந்திர சோழனின் ஆட்சிக் காலத்தில் [கி.பி. 1051—1063] வாழ்ந்த மலையகுல மன்ன

ஞவன்; சைவ சமயத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் தந்த மலையமான்களில் இவன் ஒருவனே திருமால் பக்தனுக விளங்கினுன். இரணகேசரி இராமன் என்னும் இயற்பெயரையும், நரசிங்கவர்மன் என்னும் அபிடேகப் பெயரையும் தாங்கி, முடி கவித்து மிலாடு இரண்டாயிரம் பூமியும் ஆண்டவன். பார்கவ கோத்திரத்தான்;

## திருமாற்கோயில் திருப்பணி

இம்மன்னனின் ஆட்சிக் காலத்தில் திருக்கோவலூரிலுள்ள திருஇடைக்கழி ஆழ்வார்க் கோயிலின் ஸ்ரீவிமானம் பழுதுற்றுப் பிளந்தது; அதனைக் கண்ணுற்ற இம்மன்னன், இராசேந்திர சோழனின் 6வது[கி.பி. 1057] ஆண்டில் கருங்கற்களைக் கொண்டு புதிய ஸ்ரீவிமானமும் மண்டபமும் எடுப்பித்தான். திருச்சுற்று மாளிகையும் முன் மண்டபமும் கட்டினுன். முன்பிருந்த கல்வெட்டுகளைப் படி எடுத்துப் புதிய விமானத்தில் பொறித்து வைத்தான். சந்திர சூரியர் உள்ளவரை நிலைபெற்று எரிய இரண்டு நந்தா விளக்குகள் அமைத்து, அவற்றுக்கு முதற் பொருளாக 64 பசுக்களையும் வழங்கினுன்.

1 ஸ்வஸ்திஸ்ரீ நரஸிம்ஹவன்ம நிர்பதி ஸ்ரீகோவலூரே பஜன் வாஸம்—
விஸ்வ ஜகனிவாஸ வபுஷா ஸ்ரீவாமானஸ்ய்க்ரோ சைலம்—
சும்பித ஸாதகும்ப — விலசத்கும்பம் ம

2. ஹாமண்டபம் ப்ரகாரம் பரமாளிகா விலஸிதம் முக்தாமயீந்ச—
ப்ரபாகம் கோயில் ஸ்ரீவைஷ்ணவர் ரக்ஷை ஸ்வஸ்திஸ்ரீ—
திருமகள் மருவிய செங்கோல் வளர தன் திருத்தமைய னேடும் போ

3. ய் இரட்டபாடி ஏழரை இலக்கமுங் கொண்டு கொல்லா புரத்து—
ஜயஸ்தம்பம் நாட்டி மீண்டு போந்து பேராற்றங் கரை—
கொப்பத்து ஆஹவமல்லனை அஞ்சுவித்து ஆங்கவன்—
ஆனையுங் குதிரையும் பெண்

4. டிர் பண்டாரமும் கைக்கொண்டு விஜையாபிஷேகம் செய்து—
வீரஸிம்ஹாசனத்து வீற்றிருந்தருளிய கோப்பரகே சரி—
பன்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர தேவர்க்கு யாண்டு—
ஆருவது மிலாடான ஜநநாத வளநாட்டு குறு

5. க்கை கூற்றத்து பிரம்மதேயம் திருக்கோவலூரான ஸ்ரீமதுராந்தக—
சதுர்வேதி மங்கலத்து திருவிடைக்கழி ஆழ்வார் ஸ்ரீவிமானம்—
முன்பு இட்டிகை படையாய்ப் பலகைப் பிளந்தமை—
கண்டு பார்கவ வம்சத்து மிலாடு உடை

6. யார் இரணகேசரி இராமரான நரசிங்கவன்மர் கோயிலை இழிச்சிக்—
கருங்கல்லே கொண்டு ஸ்ரீவிமானமும் மண்டபமும்
எடுப்பித்து பூரண பொற்குடம் ஐஞ்சும் வைப்பித்து
திருச் சுற்று மாளிகையும் முன்பில் மண்டப

7. மும் எடுப்பித்து முத்துப் பந்தலுங் குடுத்து முன்பு கல்வெட்டுப்படி—
யுள்ள நிமந்தனைகளெல்லாம் இந்த ஸ்ரீவிமானத்தே—

கல்லும் வெட்டுவித்தார் நரசிங்கவன்மர் என்று
அபிஷேகம் —

பண்

8. ணி முடி கவித்து மிலாடு இரண்டாயிரம் பூமியும்
ஆண்ட—

மிலாடுடையார் [நரசிங்கவன்மர் — நரசிங்கபன்மர்—

சந்திராதித்தவல் எரிக்க திருநுந்தா விளக்கு இரண்டு—
இவை

9. க்கு விளக்கு எரிக்க குடுத்த சாவாமூவாப் பெரும்பசு—

அறுபத்து நாலு: நிச்சால் நிசதம் விளக்கு இரண்டிற்கு—

நெய் உரி இப்பசு கொ [ண்டு]

இரண்டாம் நரசிம்மவர்மன் செய்த திருமாற் கோயில் திருப்பணிக்கு இக்கல்வெட்டுப் போதிய சான்ருகத் திகழ்கின்றது.[36]

## கல்வெட்டுப் பாடல்

நரசிம்மவர்மனின் இதே திருப்பணியைக் குறிப்பிடும் மற்ருெரு கல்வெட்டு, வெண்பா வடிவில் அமைந்தள்ளது. அப்பாடல் பின் வருமாறு :—

"ஸ்வஸ்திஸ்ரீ

நங்கோன் இராமன் எழிற்செங்கோ நரசிங்கன்
எங்கோன்றன் கோவல் இடைக்கழியில் - அங்கேய்
கருங்கற் படையைந்து செம்பொற் குடந்தா
னெருங்கப் பயில்வித்தா னின்று"

இவ்வெண்பாவில் முதலடியின் இறுதிச் சீர் தளை தட்டுகிறது. மூலக் கல்வெட்டு மேற்காட்டியவாறு பாடல் வடிவில் இல்லாமல், உரைநடை போல வரையப் பெற்றுள்ளது.[37]

X

தட்டவில் இ.

## செம்பங்குடையான்

நரசிம்மவர்மனிடம் பல அரசு அதிகாரிகள் பணியாற்றி னர்; அவர்களில் ஒருவனுன 'செம்பங்குடையான் நாராய ணன் ஆதித்தனுன சோழசுந்தர மூவேந்த வேளான்' என்னும் அதிகாரியே, நரசிம்மவர்மனின் சார்பாகத் திருமாற்கோயில் திருப்பணியை முன்னின்று நடத்தியுள்ளான். இச்செய்தியை,

1. "மிலாடுடையார் நரசிங்கவர்க்காக நின்று
2: இந்த ஸ்ரீவிமானம் எடுப்பிச்சான் செம்பங்குடையான்
3. நாராயணன் ஆதித்தனுன சோழசுந்தர மூவேந்த வேளான்"

என்னும் கல்வெட்டினுல் உணரலாம்.38

## கரியபெருமாள் திருப்பணி

திருமாற் கோயில் திருப்பணியில், நரசிம்மவர்மனின் பேரனுன கரியபெருமாள் என்பவனுக்கும் பங்கிருந்தது. கரியபெருமாள் பெரியநாயன் என்றும் இவன் அழைக்கப் பெற்றுள்ளான். பெரியநாயன் என்னும் இவ்வடைமொழி, இவனுக்குப் பின்னர் வேறு சில மலையமன்னர்களின் பெயர் களோடு இணைந்து காணப் பெறுவது இங்கு குறிப்பிடத் தக்கது. இவன் தன்னை பெரிய நாயனுன நரசிங்க மிலாடு டையான் என்றும் அழைத்துக் கொண்டான்.

1. "இந்த ஸ்ரீவிமான கருங்கற்படை செய்வித்த இராமன் நரசிங்க பன்மன் பேரன் கரியபெருமாள் பெரியநாயனேன் இக்கோயில்— திருப்பணிக்கு
2. ஒருதலை கற்பூண் ஒரு கிடா இராஜைராஜ தேவர்க்கு மூன்ருவது— முதல் என் வம்சியர் பரமாக இடுவதாகக் கல்வெட்டி— வித்தேன் பெரியநாயனுன நர

3. சிங்க மலாடுடையானேன்.''

இது கரிய பெருமாளின் திருப்பணியைக் குறிப்பிடும் கல்வெட்டாகும்.39 இம்மலையகுல மன்னர்களின் திருமாற் கோயில் திருப்பணிகளைப் பற்றிக் கூறும் மேற்காட்டிய கல்வெட்டுகளை, இன்றும் திருக்கோவலூர் இடைக்கழி ஆழ்வார்க் கோயிலில் காணலாம்.

## முதலாம் கரிகாலச்சோழ ஆடையூர் நாடாழ்வான்

அதிராசேந்திர சோழனின் ஆட்சிக்காலம் முதல் (கி.பி. 1070) மலையமான்களில் சிலர், வடார்க்காடு மாவட்டம், திருவண்ணாமலை வட்டம், ஆடையூர்ப் பகுதியிலும் ஆட்சி செலுத்தியுள்ளனர். அப்பகுதி ஆடையூர் நாடு என்று கல்வெட்டுகளில் வழங்கப் பெற்றுள்ளது. கரிகாலச் சோழ ஆடையூர் நாடாழ்வான் என்ற பெயரில் வேறு சில மலைய மன்னர்களும் இருந்தமையால், இவனை முதலாமவன் என்று குறிப்பிடுகிறோம். இப்பகுதியில் இருந்த மலைய மன்னர்களின் பெயர்களில், கரிகாலச் சோழன் என்னும் சங்க காலச் சோழ மன்னனின் பெயர் இணைந்தே காணப்பெறுகிறது. ஒருவன் மட்டும் நரசிங்கவன்மன் என்று குறிக்கப் பெற்றுள்ளான்.

முதலாம் கரிகாலச் சோழ ஆடையூர் நாடாழ்வானுக்கு முத்தன் காமன் என்னும் இயற்பெயர் உண்டு.

### நிவந்தம்

சேய்மையிலுள்ள ஆடையூர் நாட்டில் இவன் ஆட்சி செலுத்தியவன் ஆயினும், தன் குல தெய்வமான திருக்கோவலூர் வீரட்டானமுடையாரை மறந்தானில்லை. கி.பி. 1073 ஆவது ஆண்டில் அவ்விறைவனுக்கு நந்தாவிளக்கு ஒன்று எரிக்க 32 பசுக்களைத் தானமாக வழங்கிய செய்தி, அங்குள்ள கல்வெட்டு ஒன்றினால் புலனாகிறது.40

## குறிப்புகள்

1. பன்னிரு திருமுறை வரலாறு, பாகம்-II, பக்.400—வித்துவான் திரு க. வெள்ளைவாரணனார்.
2. பெரிய புராண ஆராய்ச்சி பக். 74—டாக்டர் மா. இராசமாணிக்கனார்.
3. A.R.E. 1927–28 No, 151&1930—31, No.87&193
4. A.R.E. 1936–37, Part-II, Para. 22.
5. A R.E. 1902, No. 279(பின் இணைப்புக் கல்வெட்டு எண். 1)
6. A.R.E. 1902, No. 343.
7. A.R.E 1943-44, No, 241
8. A,R.E. 1902, No. 362. பார்கவ கோத்திரத்தார் ஜமதக்கினியின் மரபைச் சார்ந்தவராகக் கூறப் பெறுவர்.
9. பிற்காலச் சோழர் சரித்திரம் (1967), பாகம்-I, பக். 54 — வித்துவான் திரு தி. வை. சதாசிவ பண்டாரத்தார்.
10. A.R.E 1936-37, Part-II, Para. 22
11. Epigraphia Indica, vol, VII, p. 135 (362of1902) இக்கல்வெட்டுக் கூறும் செவலை என்னும் ஊர், திருக்கோவலூருக்குக் கிழக்கே 24 கி.மீ. தொலைவில் பெரிய செவலை என்னும் பெயருடன் இன்றும் உள்ளது.
12. A.R.E. 1906, Part–II, Para–42
13. A.R.E. 1927–28, No. 151&1930-31, Nos. 87,193

13a. Recently Discovered inscriptions from Tirumalai, N.A. by L.K. Srinivasan (Summaries of Papers—Epigraphical Society of India, Fourth Annual Congress, Madras-1978)

14. A R.E. 1907, No. 325 & 1908, Part-II, Para 51
15. A.R.E. 1936-37, Nos, 251 & 252—தானமாக வழங்கப்பெற்ற பனைப்பாடி என்னும் ஊரைக் குரந்திகுணவீர படாரரும் அவர் வழி மாணாக்கரும் மேற்பார்வை செய்தனர்.
16. முதலாம் இராசராச சோழன், பக். 140 — திரு க. த. திருநாவுக்கரசு
17. S.I.I., vol, III, No,863
18. S.I.I, vol, XIII, No, 104
19. S.I.I., vol, XIII, No, 63 & S.I.I., vol, VII, No. 857
20. S.I.I., vol, VII; No, 883
21. A.R.E., 1905, No, 20
22. A.R.E., 1905, No. 20 & 1906, No. 133
23. முதலாம் இராசேந்திர சோழன், பக். 243—திரு ம. இராசசேகர தங்கமணி
24. Eastern Calukyas, pp. 38 & 39—Dr N. Venkata ramanayya M.A.
25. வரலாற்று வடிவங்கள், கல்வெட்டு எண்–1— புலவர் சு, குப்புசாமி
26. S.I.I., vol. VII, No, 868
27. வரலாற்று வடிவங்கள், கல்வெட்டு எண் 3— புலவர் சு, குப்புசாமி
28. S.I.I, vol, VII, No. 891
29. A R.E· 1908, No: 587
30. A.R.E. 1902, No: 13
31. S.I.I., vol, VII, No,888

32. A.R.E. 1902, No, 13 & S.I.I. vol. VII, Nos. 869 & 888
33. S.I.I , vol. VII, No. 888 & A.R.E. 1905, No,10
34. S.I.I., vol. VII, No. 900
35. A.R.E. 1904, No. 291
36. Epigraphia Indica, vol. VII, pp. 145–146 (123 of 1900)
37. 1. "ஸ்வஸ்திஸ்ரீ நங்கோன் இராமன் எழிற்செங்கோ
    2. நரசிங்கன் எங்கோன்றன் கோவல் இடைக் கழியி
    3. ல் அங்கேய் கருங்கற்படை ஐ(ந்)து செம்பொற்
    4. குடந்தா னெருங்கப் பயில்வித்தானின்று"
    (Epigraphia Indica, vol VII, p· 146, 188 of 1900)
38. Epigraphia Indica, vol. VII, p. 147(120 of 1900)
39. Epigraphia Indica, vol. VII, p. 147 (119of1900)
40. S I.I. vol. VII, No. 884

# 5

## பிற்பட்ட சோழர் காலம்

### [கி.பி. 1070—1256]

முதலாம் குலோத்துங்க சோழன் காலம் முதல் மூன்றும் இராசராச சோழன் காலம் முடிய [கி. பி 1070—1256] வாழ்ந்த மலைய மன்னர்களைப் பிற்பட்ட சோழர் காலத்தில் வாழ்ந்தவராகக் கொள்ளலாம். இக்கால கட்டத்தில் வாழ்ந்த இம்மன்னர்கள் கோவலராயர், சேதி ராயர், மலைய குலராயர் முதலான பெயர்களால் அழைக்கப் பெற்றனர். உறவுமுறை வேறுபாடுகள் கருதி இவ்வாறு அழைக்கப் பெற்றனர்.

### வாணரும் மலையரும்

தென்பெண்ணையாற்று வடகரைப் பகுதிகளில் ஆட்சி உரிமை பெற்ற மலையமான்கள், பெரும்பாலும் வாணகோ வரையர் என்னும் பட்டத்துடன் இருந்துள்ளனர். காரணம்; அப்பகுதி வாணகப்பாடி நாடாகும். சோழ மன்னர்களில் சிலர், பாண்டியர் என்னும் பட்டம் புனைந்து பாண்டிய நாடு

களில் அரசப் பிரதிநிதியாக இருந்தமைபோல மலையமான்களில் சிலர் வாணகோவரையர் என்னும் பட்டம் புனைந்து வாணகப்பாடி நாட்டுக்குத் தலைவர்களாக விளங்கினர்.[1]

காட்டாக, இராசேந்திர சோழ சேதிராயனின் மகன் சோழ மகதை நாடாழ்வான் என்றும், குலோத்துங்கச் சோழச் சேதிராயனின் மகன் எதிரிலி சோழ வாணகோவரையன் என்றும், பொன் பரப்பின வாணகோவரையனின் மகன் இராசராச சேதிராயன் என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுவதைக் காணலாம்.[2]

எனவே, வாணகோவரையர் எனப்பெறும் வாணர்குல மன்னர்கள் வேறு; வாணகோவரையர் என்னும் பட்டமுடைய மலையமான்கள் வேறு. பெயர் ஒற்றுமை கருதி இருவரையும் ஒருவராகக் கருதுதல் ஆகாது.

## அதிராசேந்திர கோவலராயன்

இவன் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் [கி. பி. 1070–1120] வாழ்ந்தவன். நாட்டு நிர்வாகத்தில் இவனுடைய பங்கு இன்னதென அறிய இயலவில்லை. பெருங்குறும்பன் அமுனை கண்டனின் தந்தையான உத்தம சோழ நாடாழ்வானுக்குக் கீழ் ஒரு சிறு அதிகாரியாக விளங்கினான் போலும். உத்தமசோழ நாடாழ்வானைச் சார்த்தித் திருக்கோவலூர்ச் சிவபெருமானுக்கு விளக்குத் தானமாக இவன் 32 பசுக்களை வழங்கிய செய்தி கல்வெட்டில் காணப் பெறுகிறது.[3]

## முதலாம் இராசராசச் சேதிராயன்

இவன் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந்த மலையமன்னர்களில் ஒருவன். கிளியூர் மலையமான் பெரிய உடையான் என்றும் இவன் அழைக்கப் பெற்றான். திருக்கோவலூருக்குத் தெற்கே 11 கி.மீ. தொலைவில் உள்ள

அரியூர்ப் பகுதியில் இவன் ஆட்சி செலுத்தினான். இதே பெயருடன் இரண்டாம் இராசராச சோழன் காலத்தில் வேறொரு மலையமன்னன் இருந்துள்ளமையால் இவனை முதலாமவன் என்று குறிப்பிடுகிறோம்.

இம்மன்னனின் வழிவந்தோர் சிலர் பிற்காலத்தில் இறையூர் என்னும் ஊரில் இருந்து, மலையநாட்டின் ஒரு பகுதியில் ஆட்சி செலுத்தினர். இது திருக்கோவலூரிலிருந்து தெற்கே 22 கி. மீ. தொலைவில் உள்ள ஒரு சிற்றூராகும். திண்டிவனம், விழுப்புரம், விருத்தாசலம் வட்டங்களிலும் இப்பெயருடைய ஊர்கள் சில உள்ளன. எனினும், அவற்றில் மலையமன்னர்கள் வாழ்ந்தமைக்குச் சான்றுகள் இல்லை.

### அறச்செயல்

இராசராசச் சேதிராயன் குலோத்துங்க சோழனின் 6ஆவது [கி. பி. 1076] ஆண்டில், கோவலூர் வீரட்டான முடையார்க்குத் திருக்கார்த்திகைத் திருநாளுக்கும், திரு நாட்படிக்கும், சந்திக்குமாக அரியூரின் நான்கு எல்லைகளுக்கு உட்பட்ட நன்செய் புன்செய் நிலங்களுக்குக் குடிமக்கள் தனக்குச் செலுத்த வேண்டிய கடமை குடிமை உள்ளிட்ட அனைத்து ஆயங்களையும் கொடையாக வழங்கினான்.4

## இராசேந்திர சோழ மலையமான்

இம்மன்னன் முதலாம் குலோத்துங்க சோழன், அவன் மகன் விக்கிரம சோழன் ஆகியோர் ஆட்சிக்காலங்களில் வாழ்ந்தவன். கிளியூர் மலையமான் மல்லன், கிளியூர் மலையமான் சதிரன் மலையன் முதலான வேறு பெயர்களும் இவனுக்கு உண்டு

மலையகுலராயர் என்னும் பட்டமுடைய சில தலைவர்கள் இவனுக்குக் கீழ்ப்படிந்த அதிகாரிகளாக இருந்தனர், இவர்கள் அனைவரும் குலோத்துங்கனின் 10 ஆவது [கி. பி. 1 080] ஆண்டில், தன் தலைவனான இராசேந்திர சோழ

மலையமானைச் சார்த்திச் சிவன் கோயில்களுக்கும் திருமாற் கோயிலுக்கும் பல்வேறு நிவந்தங்களை வழங்கியுள்ளனர்.

## மலைய குலராயர்

சூரியன் மறவன் சூரியனான மலையகுலராயன் என்பவன் திருக்கோவலூர் இடைக்கழி ஆழ்வார்க்கு இரண்டு நந்தா விளக்குகள் எரிக்க 192 ஆடுகளையும், சூரியன் சாவன் சகாயனான மலையகுல ராசன் என்பவன் திருக்கோவலூர் வீரட்டான முடையார்க்கு 7 விளக்குகள் எரிக்க 224 பசுக்களையும் மலையமான் சூரியன் சகாயனான மலைய குலராசன் என்பவன் திருநாவலூர்த் திருத்தொண்டீஸ்வரமுடைய மகாதேவர்க்கு 4 விளக்குகள் எரிக்க 128 பசுக்களையும் தானமாக வழங்கியுள்ளனர்.5

இம்மலையமானைச் சார்த்திப் பல்வேறு இடங்களில் பல அதிகாரிகளால் ஒரே ஆண்டில் வழங்கப்பெற்ற இத் தானங்களை நோக்க, இராசேந்திர சோழ மலையமான் இக் கால கட்டத்தில் பெரிதும் நோய்வாய்ப்பட்டிருந்தான் என்றும், அந்நோயினின்றும் விடுபட்டு உடல்நலம் பெற வேண்டி மேற்கூறிய அறக்கட்டளைகள் இவர்களால் நிறுவப் பெற்றன என்றும் கருதலாம்.

இவன் நன்மையடைய வேண்டி நெய்வணையிலுள்ள பொற்குடம் கொடுத்தருளிய நாயனார்க்கு 2 விளக்குகள் எரிக்க 64 பசுக்களும், சித்தலிங்கமடம் திருப்புலிப் பகவ தேவர்க்கு 2 விளக்குகள் எரிக்க 64 பசுக்களும் தானமாக வழங்கப்பெற்றுள்ளன.6 இக்கொடைகளும் மேற்கூறிய கருத்தினை வலியுறுத்துகின்றன.

## அறச் செயல்கள்

இராசேந்திர சோழ மலையமான் சித்தலிங்கமடம் சிவன் கோயிலுக்குப் பல தானங்கள் செய்துள்ளான். இவை குலோத்துங்க சோழன் காலத்தில் வழங்கப்பெற்றவை

விக்கிரம சோழனின் 12ஆவது [கி. பி. 1130] ஆண்டில், நெய்வனேப் பெருமானுக்கு நிலக்கொடையளித்துள்ளான்.7

ஆதலின், இவன் உடல்நலம் தேறி மேலும் சில ஆண்டுகள் வாழ்ந்தனன் என்பது தேற்றம்.

## இராசேந்திர சோழச் சேதிராயன்

முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன் ஆகியோர் காலங்களில் வாழ்ந்த மலேயகுலத்து மன்னர்களில் இவனும் ஒருவன். மலேயமான் நானூற்றுவன், மலேயமான் நானூற்றுவன் மலேயன், மலேயமான் நானூற்றுவன் அத்தி மல்லன் முதலான பெயர்கள் இவனுக்குரிய பெயர்களாகக் கல்வெட்டுகளில் காணப்பெறுகின்றன. இவன் உத்தர நாளில் பிறந்தவன் என்று அறையணி நல்லூர்ச்சாசனம் ஒன்று கூறுகிறது.

### முன்ேனாரும் பின்ேனாரும்

இவன் தந்தை ஆகார சூரன் என்னும் பெயருடைய மலேயமான் என்றும், மகன் குலோத்துங்க சோழ பெரிய சீயனுன சேழ மகதை நாடாழ்வான் என்றும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இச்சேதிராயன் தன் மகள் ஆளவந்தாள் என்பவளே, மலேயமான் இராமன் சூரியனுன இராசேந்திர சோழ மலேய குலராயன் என்பவனுக்கு மணம் செய்வித்தான். இம்மலேய குலராயன் மலேயர் குலத்து மன்னன் அல்லன். மலேயநாட்டு அரசு அதிகாரியாகவே இருத்தல் வேண்டும். இவன் தன் தாயின் நன்மையைக் கருதி சித்தலிங்கமடம் இறைவனுக்கு நிலக்கொடை வழங்கியுள்ளான்.8

இம்மலேயமான் மிகச்சிறந்த சிவபக்தனுக விளங்கினுன்; ஆயினும் புறச்சமயங்களேப் போற்றும் இயல்புடையவனுகத் திகழ்ந்தான். சிவன் கோயில்களுக்கும் திருமாற் கோயிலுக்கும் வேறுபாடின்றி பல அறக்கட்டளேகள் நிறுவியுள்ளான்.

## திருமேனிகள்

இராசேந்திர சோழ சேதிராயன் முதலாம் குலோத்துங்க சோழனின் 45ஆவது [கி. பி 1115] ஆண்டில், நெய்வனையிலுள்ள பொற்குடம் கொண்டருளிய நாயனார்க் கோயிலில் நடராசப்பெருமானின் திருமேனியை நிறுவி நித்த நிவேதனங்களுக்கு ஏற்பாடும் செய்தான். கி. பி. 1116 ஆவது ஆண்டில் அறையணி நல்லூர் ஒப்பொருவருமில்லா நாயனார்க் கோயிலில் தட்சணாமூர்த்தி தேவரின் திருமேனியை நிறுவி, அத்தேவர்க்குத் தான் பிறந்த உத்தரநாளில் அமுது படைக்கவும், விளக்கு எரிக்கவும் தானம் வழங்கினான்.10

## நிலக்கொடைகள்

இம்மலையமான் குலோத்துங்க சோழனின் 31ஆவது [கி.பி 1101] ஆண்டில் திருக்கோவலூர் இடைக்கழி ஆழ்வார்க்கு அர்த்தயாம பூசைக்கு இரண்டு வேலி நிலங்களையும், விக்கிரமசோழனின் 10ஆவது [கி.பி 1128] ஆண்டில் கோவலூர் வீரட்டானமுடையார்க்கு விளக்குத் தானமாக தேவன்குடி கிராமத்தில் 2400 குழி நிலங்களையும் தேவதானங்களாகக் கொடுத்துள்ளான்.11 முடிகொண்ட சோழச் சதுர்வேதி மங்கலத்து நிலங்களைக் கோவலூர் இறைவனுக்கு இறையிலியாக்கினான்.12

இவன் மனைவி சித்தலிங்கமடம் சிவன் கோயில் பரிவார தேவர்க்கு நாள்தோறும் அமுது உள்ளிட்ட தேவைகளுக்காகவும், இவன் மகன் சோழ மகதை நாடாழ்வான் அக் கோயிலில் வைகாசி புரட்டாசித் திருநாட்களுக்கும் நிலக் கொடை வழங்கினர்.13

இவன் மனைவிபற்றிய செய்திகளைத் தற்பொழுதுள்ள சான்றுகளைக் கொண்டு அறிய இயலவில்லை. மகனான மகதை நாடாழ்வான், வாணகப்பாடி நாட்டின் ஒரு பகுதிக் குத் தலைவனாக விளங்கினான் போலும்.

பாடி காவலர்

இராசேந்திரசோழ சேதிராயன் காலத்தில் வேறு சில மலையமன்னர்கள் மலைய நாட்டின் சிறுசிறு பகுதிகளில் ஆட்சி செலுத்தியுள்ளனர், சிலர் அதிகாரிகளாக விளங்கி யுள்ளனர். கிளியூர் பூவன் மருதனான ஆழ்வான் அங்ககார மலையமான் என்பவன், சித்தலிங்க மடம் பகுதியில் ஆட்சி செலுத்தியுள்ளான். இவ்வூர் திருக்கோவலூரிலிருந்து கிழக்கே 8 கி. மீ. தொலைவில் உள்ளது. இவன் அவ்வூர் இறைவனுக்கு அமுது படைக்கவும், 8 சந்திவிளக்குகள் எரிக்கவும் 14 அடிக் கோலால் 1650 குழி நிலங்களை இறையிலி தேவதானமாக வழங்கினான். கி.பி.1119ஆம் ஆண்டுச் சாசனம் ஒன்றினால் இச்செய்தி புலனாகிறது.14

சகிரயன் அனுப்பூவனான குலோத்துங்க சோழ மலைய குலராயன் என்பவன், ஜம்பை என்னும் ஊர்ப் பகுதியில் ஆட்சி செலுத்தினான். இவ்வூர் திருக்கோவலூ ருக்கு வடமேற்கே 20 கி.மீ. தொலைவில் உள்ளது. குலமங் கலமான :வீரசோழநல்லூரிலிருந்து குடிமக்கள் தனக்குச் செலுத்த வேண்டிய பாடிகாவல் வரிகளை, இவன் ஜம்பைத் தான்தோன்றீஸ்வரமுடைய மகாதேவர்க்கு அர்த்தயாம பூசைக்காக வழங்கியுள்ளான்.15

தில்லைநாயகன் தேவர்கண்டன் அகமுடையான் மலையனான இராசேந்திரசோழ சேதிராயன் என்பவன், பேரின்கூர்ப் பகுதியில் இருந்தவன். பேரின்கூர் என்பது தற்காலத்தில் பேரங்கியூர் என்னும் பெயருடன், திருக்கோவலூருக்கு வடகிழக்கே ஏறத்தாழ 30 கி.மீ.தொலைவில் உள்ளது. இவன் மகள் சதிரி என்பவள், சித்தலிங்கமடம் திருப்புலிப்பகவ தேவர்க்கு நிலைவிளக்கு ஒன்று எரிக்கப் பொற்காசுகளை மூல தனமாக வழங்கினாள்.16

மலையமான் திருக்கலை மருந்தன் ஆழ்வானங்ககார மலையமான் என்ற அதிகாரியின் மனைவியொருத்தி, சில நிலங்களை விலைக்கு வாங்கி, அவற்றைத் திருப்புலிப் பகவர்க்குத் தேவதானமாக நல்கினாள்.17

கிளியூர் மலையமான் சூரியன் இராமனுனஇராசேந்திரசோழ மலையகுலராயன் என்பவன், எலவானுசூர்ப் பகுதியில் ஆட்சி செலுத்தினுன். எலவானுசூர் என்பது முற்காலத்தில் இறையானரையூர் என்னும் பெயருடன் விளங்கியது. இதற்குச் சோழ கேரளச் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரும் உண்டு.

இவன் இறையானரையூர் ஊர்பாகங்கொண்டருளிய நாயனுர்க்கும், ஸ்ரீபதரி ஆழ்வார்க்கும், திருச்சக்கரத்தாழ் வார்க்கும், வானவன்மாதேவி விண்ணகராழ்வாருக்கும், இராச நாராயண விண்ணகராழ்வார்க்கும், பிடாரியார்க் கும் தனது பாடி காவல் வரிகளைத் தானமாக வழங்கிய செய்தி அங்குள்ள கல்வெட்டினுல் புலனுகிறது.18

## விக்கிரம சோழச் சேதிராயன்

விக்கிரமசோழன், அவன் மகன் இரண்டாம் குலோத் துங்க சோழன் ஆகிய இரண்டு சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் வாழ்ந்த மலையமன்னர்களில் இவனும் ஒருவன். இவன் காலம் முதல் மலையர்களில் சிலர், பெரிய உடையான் என்னும் அடைமொழியுடன் குறிக்கப் பெற்றனர்.

### மனைவியும் மகளும்

உத்தமசோழி என்னும் பெயருடையவள் விக்கிரம சோழச் சேதிராயனின் மனைவியாக விளங்கினுள். இவ் வம்மையார் வடகரை உடையான் என்பவனின் மகளாவாள். வடகரை உடைமான் என்பவன் வாணகோவரையனுக இருத்தல் வேண்டும்.

விக்கிரமசோழச் சேதிராயனுக்கு உத்தமசோழியின் பாற் பிறந்தவன் விக்கிரமசோழக் கோவலராயன் ஆவான். தந்தைக்கும் மகனுக்கும் பெயரில் வேறுபாடு தோன்ற தந்தை சேதிராயன் என்றும், மகன் கோவலராயன் என்றும் குறிக்கப் பெற்றனர். இவ்வழக்கத்தை இவனுக்குப் பின் வந்த சில மலையர்களும் பின்பற்றியுள்ளனர்.

### கொடைகள்

இம்மன்னன் விக்கிரம சோழனின் 5ஆவது [கி.பி 1123] ஆண்டில், கோவலூர் வீரட்டானத்தார்க்கு நந்தாவிளக்கு எரிக்கக் கோதானம் வழங்கினான்.19 8ஆவது [கி.பி. 1126] ஆண்டில் நெய்வனெயம்மானுக்கு இறையிலியாக நிலதானம் செய்தான்.20 கி.பி. 1133 ஆவது ஆண்டில் கோவலூர் இடைக்கழி ஆழ்வார்க் கோயிலைச் சார்ந்த திருமழிசை ஆழ்வார்த் திருமடத்துக்குத் தானமளித்தார்.21 இவன் மனைவி உத்தமசோழி, திருக்கோவலூர் வீரட்டானத்தில் திருமடைப்பள்ளி ஒன்று நிறுவிய செய்தி அங்குள்ள சாசனத்தில் வரையப் பெற்றுள்ளது.22

## குலோத்துங்க சோழச் சேதிராயன்

விக்கிரம சோழச் சேதிராயனுக்குப் பின்னர், மலையர் குலத்தில் சிறப்புடன் விளங்கியவன் குலோத்துங்க சோழச் சேதிராயனாவான். இவன் பெரியான், பெரிய உடையான் முதலான அடைமொழிகளுடன் விளங்கினான். அத்திமல்லன் எதிரிலி சோழவாண கோவரையன் என்பான், இச்சேதி ராயனின் மகனென்று அறையணி நல்லூர்ச் சாசனம் கூறுகிறது.

### பள்ளியறை நாச்சியார்

குலோத்துங்க சோழச் சேதிராயன் செய்தளித்த திருமேனிகளில், அறையணிநல்லூர் ஒப்பொருவருமில்லா நாயனார்க் கோயிலில் நிறுவிய பள்ளியறை நாச்சியாரின் திருமேனி குறிப்பிடத் தக்கது. அந்நாச்சியார்க்குக் கற்றளி ஒன்றும் எடுப்பித்தான்.

### கொடைகள்

குலோத்துங்க சோழச் சேதிராயன் சைவ வைணவக் கோயில்களுக்குப் பல்வேறு தானங்கள் செய்துள்ள

அவற்றுள் பெரும்பாலானவை நிலக்கொடைகளாகும். இரண்டாம் குலோத்துங்க சோழனின் 5ஆவது [கி.பி 1138] ஆண்டில், கோவலூர் வீரட்டானத்து ஆளுடையநாச்சியாரை ஞாயிற்றுக்கிழமை தோறும் எழுந்தருளச் செய்யவும், திருவமுது படைக்கவும் இவனுடைய கட்டளைக் கிணங்க ஊர்ச்சபையினர் $1\frac{1}{2}$ வேலி நிலங்களைத் தானமாக வழங்கினர். 23

ஞாயிற்றுக்கிழமைப் புறமாக இவ்வாறு வழங்கிய நிலம் போதாமையின், கி.பி. 1143 ஆவது ஆண்டில் மேலும் சில நிலங்கள் கூடுதலாகக் கொடுக்கப் பெற்றன 24

அருங்குறுக்கை என்னும் ஊரிலுள்ள பலவாயுதபல்லவரைய நல்லூர் என்னும் பெயருடைய நிலங்களைப் பெரும்புனம் என்னும் ஊரிலுள்ள திருத்தான்தோன்றீஸ்வரமுடைய நாயனார்க்கு , இறையிலி தேவதானமாக்கினான். அந்நிலங்களுக்குத் திருவாய்க்குலக்கோன் ஏந்தல் என்ற பெயரும் உண்டு. இதனை அருங்குறுக்கைச் சாசனம் புலப்படுத்துகிறது.25

கோவலூர் இடைக்கழி ஆழ்வார்க்கு கி.பி. 1139 ஆவது ஆண்டில் 4000 குழி நன்செய் புன்செய் நிலங்களை இவன் இறையிலியாக வழங்கியதைத் தொட்டி என்னும் ஊரிலுள்ள சாசனம் உணர்த்துகிறது.26 கி. பி. 1140 ஆவது ஆண்டில் அவ்வாழ்வாருக்கு நித்தம் அமுதுபடைக்கவும், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவு வழங்கவும் ஒரு வேலி அளவுள்ள நிலத்தை உரிமையாக்கினார்.27

இவன் காலத்து மலையமன்னர்களில் சிலர், வேறு சில இடங்களில் சிறுசிறு பகுதிகளை ஆண்டுள்ளனர். அவர்களில் குலோத்துங்க சோழ மலையகுலராயனும், விக்கிரமசோழ வாண குலராயனும் குறிப்பிடத்தக்கவர்கள். முன்னவன் வடார்க்காடு மாவட்டம், திருவண்ணாமலை வட்டம், செங்கண்மா என்னும் ஊர்ப்பகுதியில் இருந்தவன்.28 பின்னவன் மாரங்கியூர்ப் பகுதியில் இருந்தவன்: மாரங்கியூர் திருக்கோவலூருக்கு வடகிழக்கே 19 கி.மீ தொலைவில் உள்ளது.

இங்குள்ள இராமலிங்கேஸ்வரர்க் கோயிலில் இவன் அம்மனின் திருமேனியை நிறுவி, நித்த நிவேதனங்களுக்கு ஏற்பாடும் செய்துள்ளான்.29

## எதிரிலிசோழ வாணகுலராயன்

எதிரிலிசோழ வாணகுலராயன் குலோத்துங்கசோழச் சேதிராயனின் மகன்.30 இவன் மலையர் குலத்தவனுயினும், வாணகப்பாடி நாட்டின் தலைவனுக விளங்கியமையால், வாணகுலராயன் என்று அழைக்கப் பெற்ருன். மலையமான் அத்திமல்லன், விக்கிரமசோழ வாணகுலராயன் என்ற பெயர் களும் இவனுக்கு உண்டு.31 இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்தவன். இவனைப் பற்றிய கல்வெட்டுகள் கி.பி 1136 முதல் 1144 முடிய கிடைத் துள்ளன.

திருக்கோவலூர் வட்டத்தில் தென்பெண்ணையாற்று வட கரை நாடுகளில் ஒன்று வாணகப்பாடி.32 இவ்வாணகுல ராயனின் இந்நாட்டின் ஆட்சி உரிமையைப் பெற்றிருந் தான்: இவனுடைய கொடைகள் அனைத்தும் பெண்ணை யாற்று வடகரைத் தலங்களுக்கே உரியவையாக உள்ளன.

### கொடைகள்

தென்பெண்ணையாற்று வடகரைத் தலமான மாரங்கியூர் இராமலிங்கேஸ்வரர்க் கோயிலுக்குத் தேவதானமாக வழங் கப்பெற்றிருந்த நிலங்களுக்கு, இவன் வரி விலக்கு அளித்து இறையிலியாக மாற்றிய செய்தி, இரண்டாம் குலோத்துங் கனின் 3ஆவது [கி.பி 1136] ஆண்டுக் கல்வெட்டில் காணப் பெறுகிறது. அக்கோயிலில் அம்மனின் திருமேனியை நிறுவி, நித்த நிவேதனங்கங்களுக்கு ஏற்பாடும் செய்தான்.33

அறையணி நல்லூர் ஒப்பொருவருமில்லா நாயனரின் திருக்கோயிலில் இவன் தந்தை கிளியூர் மலையமான் குலோத் துங்க சோழச் சேதிராயனுல் நிறுவப் பெற்ற பள்ளியறை

நாச்சியார்க்குத் திருவமுது உள்ளிட்ட தேவைகளுக்குத் தேவனூர் என்னும் ஊரில், கண்ணன் ஏந்தல் என்னும் பெயருடைய 3000 குழி நிலங்களைத் தேவதான இறையிலியாக வழங்கினன்.34 இத்தேவனூர், அறையணி நல்லூருக்கு வடமேற்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது. அறையணி நல்லூர் அண்ணலுக்கு மூன்று நந்தா விளக்குகள் எரிக்கவும் ஏற்பாடு செய்துள்ளான்.35

## இரண்டாம் இராசராசச் சேதிராயன்

பிற்பட்ட சோழர் காலத்து மலைய மன்னர்களில் இரண்டாம் இராசராசச் சேதிராயனே பெருவலி படைத்த மன்னனாக விளங்கினன். இவனைப் பற்றிய கல்வெட்டுகள் கி.பி. 1148 முதல் 1221 முடிய கிடைத்துள்ளன. ஆதலின், இவன் 73 ஆண்டுகள் மலைய மன்னனாகத் திகழ்ந்தவன் என்பதில் ஐயமில்லை. ஐப்பசித் திங்கள் திருவாதிரை நாளில் பிறந்த இம்மன்னன்,இரண்டாம் இராசராசசோழன் காலம் முதல் மூன்றாம் இராசராச சோழனின் ஆட்சிக்காலத்து முற்பகுதி வரையிலும் வாழ்ந்துள்ளான்.

பெரிய உடையான் என்னும் அடைமொழி இவன் பெயரோடு இணைந்து காணப் பெறுகிறது. கிளியூர் மலையமான் பெரிய உடையான் இறையூரான இராசராச சேதிராயன் என்பது இவனுடைய முழுப்பெயராகும். சற்றுக்குடாதான், வன்னியர்நாயன் முதலான பட்டப் பெயர்களும் இவனுக்கு உண்டு. இறையூரிலிருந்து 'தன்னையொத்த குறுநில மன்னர்கள், இவனுடைய ஆட்சிக்கு உட்பட்ட பகுதியை இவனிடமிருந்து கைப்பற்றிச் சிறிது நேரங்கூட ஆட்சி செலுத்த இயலாது' என்ற பொருளில் 'சற்றுங்கொடாதான்' என்ற பட்டமும், வன்னிய குலத்தினர்க்குத் தலைவன்' என்ற பொருளில் வன்னியர் நாயன் என்ற பட்டமும் இவனுக்கு வழங்கி வந்துள்ளன. இறையூரிலிருந்து இவன் ஆட்சி செலுத்தினன். இவ்வூர் தற்பொழுது எறையூர் என்னும்

பெயருடன்,திருக்கோவலூர்க்குத் தெற்கே 22 கி.மீ. தொலை வில் ஆசனூர்ப் பெருவழியில் அமைந்துள்ளது.

## ஆட்சிப் பரப்பு

வாணகப்பாடி, செங்குன்றநாடு, மலாடு ஆகிய நாடு களில் தன் தந்தையின் காலத்தில் விதிக்கப் பெற்ற சில வரிகளை இவன் தள்ளுபடி செய்தான் என்று அறையணி நல் லூர்ச் சாசனம் ஒன்று தெரிவிக்கிறது.36 இம்மூன்று நாடு களிலும் வரிகளைத் தள்ளுபடி செய்யும் உரிமை இவனுக்கு இருந்திருத்தலின், இவை அனைத்தும் இவன் ஆட்சிக்கு உட் பட்டிருந்தமை தேற்றம். வாணகப்பாடி, செங்குன்றநாடு, மலாடு, உடைக்காட்டு நாடு ஆகிய நான்கு நாடுகளுக்கும் இவன் தலைவனாக விளங்கினான் என்ற கல்வெட்டு ஆய்வாளர் களின் கருத்தும் இங்கு உளங்கொளத் தக்கது.37

## காடவனும் மலையனும்

இதே காலகட்டத்தில் பிற்காலப் பல்லவர் குலத் தோன்றல் கூடல் ஆளப் பிறந்தான் மோகனான காடவராயன் என்பவன், பெருவலி படைத்த குறுநில மன்னனாக விளங் கினான். இவனுக்கு இராசராசக் காடவராயன், நாலுதிக்கும் வென்றான் முதலான பட்டப் பெயர்களும் உண்டு.38

## ஆகாரசூரன் முயற்சி

இரண்டாம் இராசராச சோழனின் ஆட்சிக்காலத்தில் அம்மன்னனுக்கு அடங்கி ஒழுகிய இராசராச சேதிராயனும் இராசராசக் காடவராயனும் ஏற்றம் மிக்கக் குறுநில மன் னர்களாக விளங்கியவர்கள். இவ்விருவரும் ஒன்றுபட்டிருக்க வேண்டியது அவசியமாயிற்று. இவ்வவசியத்தை உணர்ந்த ஆகாரசூரனான் கோவலராயன் என்பவன், இவ்விருவரையும் மண உறவால் பிணைக்கப் பெருமுயற்சி மேற்கொண்டான்.

இதன் விளைவாக இராசராசக் காடவராயன் தன் மகளை இராசராச சேதிராயனுக்கு மணம் செய்வித்தான். மண

உறவு இவ்விருவரையும் பிணைத்தது. பகைவர்க்கு எதிராக இருவரும் ஒன்றுபட்டு ஒத்துழைப்பு நல்குவதாகப் பாதுகாப்பு உடன்படிக்கையும் செய்து கொண்டனர். இரண்டாம் இராசராச சோழனின் 16 ஆவது [கி.பி 1162] ஆண்டில் வரையப் பெற்ற திருவெண்ணெய் நல்லூர்க் கல்வெட்டுகள் இச்செய்தியைக் குறிப்பில் உணர்த்துகின்றன.

## அம்மச்சி குடி உய்ய வந்தாள்

இனி, கொல்லூர் இராமர் பாறையிலுள்ள கல்வெட்டு ஒன்று, இராசராசச் சேதிராயனின் மனைவி அம்மச்சிக்குடி உய்ய வந்தாள் என்றும், அவ்வம்மையார் கைக்கோளமாலை என்பவளின் பேத்தி எனறும் கூறுகிறது.40 இவள் மேற்கூறிய இராசராசக் காடவராயனின் மகளாகவே இருத்தல் வேண்டும்.

## பூமாழ்வி

பூமாழ்வி என்னும் பெயருடயவள் இராசராசச் சேதிராயனின் மற்றொரு மனைவியாவாள். இவள் பொன்பரப்பின வாணகோவரையனின் மகள். இவ்வாணகோவரையன், இராசராசதேவன் பொன்பரப்பினான் ஆன குலோத்துங்கசோழ வாணகோவரையனாகவே இருத்தல் வேண்டும். காடவராயனைப் போலவே இவ்வாணகோவரையனும் சேதிராயனுடன் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்துள்ளான்.41 வாணகோவரையனின் தலைநகர் கலியாணபுரம் என்று எலவானாசூர்க் கல்வெட்டு உணர்த்துகிறது.42

பூமாழ்வி தன் பெயரால் நீர்நிலை அமைத்ததுடன் அறையணி நல்லூர் அண்ணலுக்கு அர்த்தயாம பூசைக்கு நிலக்கொடையும் வழங்கியுள்ளாள்.43 இராசராசச்சேதிராயனுக்கு இவளிடம் பிறந்தவனே பெரிய உடையான் இராசராசக் கோவலராயன் என்னும் மலையமன்னன் ஆவான். அக்கால மன்னர்கள் பல்வேறு அரசியல் காரணங்களுக்காக ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை மணத்தல் இயல்பேயாகும்.

அம்மச்சி குடி உய்யவந்தாளை மணந்த இராசராசச் சேதிராயனும், பூமாழ்வியை மணந்த இராசராசச்சேதிரா யனும் வெவ்வேறானவர்கள் என்ற கருத்தும் உள்ளது 44 சற்றுக்குடாதான், வன்னியர் நாயன் என்னும் பட்டப் பெயர்கள் இவ்விருவரையும் மணந்த இராசராசச்சேதிராய னுக்கே வழங்கி வந்தமையின், இருவரும் ஒருவரே எனக் கொள்ள வேண்டும்.

## வேளக்காரப் படையினர்

அக்காலத்தில் பேரரசர்கள் தமக்கென்று வேளக்காரப் படையை அமைத்திருந்தனர். இப்படையினர் அரசனின் நம்பிக்கைக்கு உரியவர்கள். அவன்பால் அன்பு கொண் டவர்கள். அரசனைத் தனது உயிராகக் கருதுபவர்கள். அவனுடைய மெய்க்காவலர்களாகவும் விளங்கியவர்கள். இத்தகு படையில் ஆண் பெண் ஆகிய இரு பாலாரும் இடம் பெற்றிருந்தனர்.

மலையர் குலத்துக் குறுநில மன்னர்களில் இரண்டு மன் னர்கள் இத்தகைய வேளக்காரப் படையை வைத்திருந்தனர் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. அவ்விரு வரில் ஒருவன் இராசராசச் சேதிராயன் ஆவான். மற்றொரு வன் இராசராச மலையகுலராயன் ஆவான். சேதிராயனின் வேளக்காரப் படையினர் பலரின் உறுதிமொழிகள், கொல் லூரிலும் அறையணிநல்லூர்ச் சிவன் கோயிலிலும் வரையப் பெற்றுள்ளன. அவற்றில் 47 வேளக்காரர்களின் உறுதி மொழிகள் காணப்பெறுகின்றன. கீழ்க்காணும் பட்டியலில் அவர்களின் பெயர்களைக் காணலாம்.

| வரிசை எண் | பெயர் | பால் | கல்வெட்டு உள்ள ஊர் | ஆண்டு அறிக்கை 1934-35 எண்கள் |
|---|---|---|---|---|
| 1 | அஞ்சாதான் ஐயன் அங்ககாரன் | ஆண் | கொல்லூர் இராமர் பாறை | 203 |
| 2 | அரியார் வள்ளல் | ,, | அறையணி நல்லூர்ச் சிவன் கோயில் | 156 |
| 3 | ஆகாரசூரன் | ,, | ,, | 160 |
| 4 | ஆகாரசூரன் விழுப்பறையன் | ,, | ,, | 159 |
| 5 | ஆட்கொண்ட பிள்ளை | ,, | ,, | 187 |
| 6 | உகைச்சன் பகவன் | ,, | ,, | 146 |
| 7 | கங்கன் | ,, | ,, | 154 |
| 8 | கரியன் பலவாயுத வல்ல மலையமான் | ,, | கொல்லூர்-இராமர்பாறை | 202 |
| 9 | கருமாணிக்கமான முனைய தரைய தட்டான் | ,, | அறையணி நல்லூர்ச் சிவன் கோயில் | 155 |
| 10 | காதாறக் கேட்டான் | ,, | ,, | 142 |
| 11–12 | சேதிராய மலையமான் -இருவர் | ,, | ,, | 125&145 |
| 13 | தழுவினான் | ,, | ,, | 136 |
| 14 | பிச்சனான சோழப் பறையன் | ,, | ,, | 144 |
| 15 | மற்றும் இருபத்தொருவர் | ,, | | 147,148&153 |
| 16 | அரிய நாச்சி | பெண் | ,, | 141 |
| 17 | ஆட்கொண்டநாச்சி | ,, | ,, | 157 |
| 18 | இருவர்க்கண் ஆச்சி | ,, | ,, | 149 |
| 19 | இளத்திக்கால் | ,, | ,, | 162 |
| 20 | சிங்கி | ,, | ,, | 188 |

| | | | | |
|---|---|---|---|---|
| 21 | சிறிய நங்கையாண்டி | ,, | ,, | 139 |
| 22 | சேராமுடி | ,, | ,, | 138 |
| 23 | தவஞ் செய்தாள் | ,, | ,, | 137 |
| 24 | திருவுடையாள் | ,, | ,, | 158 |
| 25 | நாடாண்டாள் | ,, | ,, | 140 |
| 26 | பெரியாழ்வி | ,, | ,, | 143 |
| 27 | வள்ளி | ,, | ,, | 136 |

இவ்வேளக்காரர்களில் அஞ்சாதான் ஐயன் அங்ககாரனின் உறுதிமொழியை மாதிரிக்காகத் தருகிறோம். பெரும்பாலோரின் உறுதிமொழிகள் இம்முறையிலேயே அமைந்துள்ளன:

1. ஸ்வஸ்திஸ்ரீ இறையூரன் பெரிய உடையானான இராஜராஜ சேதியரா
2. ராயன் வேளக்காரன் அஞ்சாதானான ஐயனங்கக்காரனேன் இவர்க்குப்பின்
3. பு சாவாதிருந்தேனாகில் என் ஒட்டையார்க்கு என்மினுட்டியைக்கு
4. டுப்பேன் இவரைத் தவிர என்னைச் சேவகங் கொள்வான் தன்மினுட்டிக்கு மினாளனாகக் கொள்வான்.45

ஒப்பந்தங்கள்

இரண்டாம் இராசராச சோழனின் 16 ஆவது [கி.பி 1162] ஆண்டில் கூடல் ஆளப்பிறந்தான் மோகனான இராசராசக் காடவராயனும் இராசராசச் சேதிராயனும் செய்து கொண்ட அரசியல் பாதுகாப்பு ஒப்பந்தம் பற்றி முன்னர்க் கூறினோம். இதனைப் போலவே வேறு சில மன்னர்களுடனும் இவன் ஒப்பந்தங்கள் செய்துள்ளான்.

மூன்றும் குலோத்துங்க சோழனின் 13 ஆவது [கி.பி 1191] ஆண்டில், இராசராச தேவன் பொன்பரப்பினான் ஆன குலோத்துங்க சோழனும் வாணகோவரையனுடனும்,46

அம்மன்னவனின் 20 ஆவது [கி.பி 1198] ஆண்டில், எரியப்பன் மருந்தனான மூவேந்தரையனுடனும்,47 இத்தகைய ஒப்பந்தங்கள் உண்டாயின. மூவேந்தரையனுடன் இயற்றிய ஒப்பந்தம் வாணகோவரையனுக்கு எதிரானது.

## இடைக்கழியார்க்குக் கொடை

இராசராசச் சேதிராயன் தனது ஆட்சிக்காலத்தில் சைவ வைணவக் கோயில்களுக்குத் தானங்கள் பல செய்துள்ளான். இவன் கொடையைப் பெற்ற கோயில்களில் திருக்கோவலூர்த் திருமாற்கோயிலும், வீரட்டானமும், அறையணிநல்லூர்ச் சிவன் கோயிலும் குறிப்பிடத் தக்கவையாகும்.

சேதிராயன் தனக்கும் தன் தந்தைக்கும் நலம் வேண்டி, இரண்டாம் இராசராச சோழனின் 2 ஆவது [கி.பி 1148] ஆண்டில், உத்தராயணத்துநாள் திருக்கோவலூர் இடைக்கழி எம்பெருமானுக்கு, திருவடி தொழுது நான்கு விளக்குகள் எரிக்க இறையிலி நிலங்கள் வழங்கினான்.48 அப்பெருமானுக்குத் திருப்பள்ளித்தாமம் இயற்ற ஊர்ச்சபையாரிடம் நிலத்தை விலைக்கு வாங்கி, அதற்குச் சற்றுங்குடாதான் திருநந்தவனம் என்று தன் பெயரை இட்டு வழங்கினான்.49

கி.பி 1170 ஆவது ஆண்டில் இடைக்கழியார்க்கு அமுதுபடையல் உள்ளிட்ட தேவைகளுக்காக, ஊர்ச்சபையாரிடம் மூன்று வேலி மூன்று மா நிலங்களைப் பொன் கொடுத்து விலைக்குப் பெற்று இறையிலி தேவதானமாக்கினான். 50 விழா நாட்களில் எம்பெருமானைச் சேவிக்கும் பொருட்டு, இடைக்கழியார்க் கோயிலைச் சார்ந்த சித்திரமேழி மடத்தில் வந்து தங்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவு வழங்க ஒரு வேலி நிலம் கொடுத்தான்.51

விழாக் காலங்களில் விளக்கெரிக்க 1200 குழி நிலங்கள் மீது விதிக்கப் பெற்றிருந்த பாடிகாவல் உள்ளிட்ட வரிகளை

நீக்கினுன்.52 ஆழ்வார் நிச்சல்படி அமுது செய்தருளமேலும் சில நிலங்களை வழங்கியுள்ளான்.53

## வீரட்டானத்தார்க்குக் கொடை

இராசராசச் சேதிராயன் திருக்கோவலூர் வீரட்டான முடைய பரமசுவாமிக்குத் திருவமுதுப்படிமாகவும் விளக்குப் புறமாகவும் பல்வேறு அறக்கட்டளைகளை நிறுவினுன். இரண்டாம் இராசராச சோழனின் 22 ஆவது [கி.பி. 1148] ஆண்டில் திருவமுதுப்படி சாத்துப்படி உள்ளிட்ட தேவைகளுக்காக 3050 குழி நிலங்களை வழங்கினுன்.54 இத்தேவர்க்கு 1184 ஆவது ஆண்டில் மேலும் நிலக்கொடை யளித்துள்ளான்.55

30 திருவிளக்குகள் எரிக்க புறந்தருகால்குழி 3150, துர்கையார் வட்டம் குழி 850, பருத்திக்கொல்லைப்பாடு குழி 1500, தேவன்குடி மாம்பாக்கிழான் திருத்துகுழி 1500 ஆக 7000 குழி நிலங்கள் மீது விதிக்கப்பெற்ற பாடிகாவல் உள்ளிட்ட வரிகளை கி.பி 1148 ஆவது ஆண்டில் தானமாகச் செலுத்தினுன்.56 கி.பி. 1150 ஆவது ஆண்டில் அர்த்த சாமம் அறுதியாக 30 சந்தி விளக்குகள் எரிக்க மதிவல்லான் திருநந்தவனத்தில் 1½ வேலி நிலங்களை இறையிலியாக்கினுன். 57 கி.பி. 1188 ஆவது ஆண்டில் 7 விளக்குகள் எரிக்க 224 பசுக்களைத் தானமாகக் கொடுத்தான்.58

## ஒப்பொருவருமில்லார்க்குக் கொடை

அறையணிநல்லூர்ஒப்பொருவருமில்லா நாயனுர்க்கு ஐப்பசித்திங்கள்தோறும் திருவாதிரை நாளில் விழா எடுக்க ஏற்பாடு செய்தான். அவ்விழாச் செலவுக்காகக் கொல்லூர் நிலங்கள் மீது விதிக்கப்பெற்ற வரிகள் அனைத்தையும் மூலதனமாக வழங்கினுன் 59 ஆதலின், இவன் ஐப்பசித்திங்கள் திருவாதிரை நாளில் பிறந்தவனுகக் கருதலாம். கோவலூர் வீரட்டான முடையாரைத் திங்கள்தோறும் திருவாதிரை

நாளில் எழுந்தருளச் செய்ய நிலக்கொடை வழங்கியமை இக்கருத்தை வலியுறுத்துகிறது.[60]

ஆமூர் அகத்தீஸ்வரமுடையார்க்கும் இவன் நிலக் கொடை வழங்கினான். இவனும் நாயன் ஆகாரசூரன் வீர ராசேந்திரச் சேதிராயனுமாகச் சேர்ந்து, கி.பி. 1193 ஆவது ஆண்டில் திருக்கோவலூர்த் திருக்குகனீஸ்வரமுடையார்க்கு நிலதானம் செய்துள்ளனர்.[61] திருக்கோவலூரில் இவன் பட்டப் பெயர்களால் நந்தவனங்களும் கால்வாய்களும் இருந்துள்ளன.

## வன்னிய தேவேந்திர மலையமான்

இராசராசச் சேதிராயனின் ஆட்சிக் காலத்தில் இவனுக்கு உறுதுணையாக விளங்கிய சில அரசியல் தலைவர்களைப் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளன. இவர்கள் மலையர் குலத்தினராகவோ அக்குலத்தாரோடு உறவு கொண்டவர்களாகவோ இருத்தல் வேண்டும். அத்தகையோரில் வன்னிய மலையமான் என்பவனும் ஒருவன். இராமன் பொற் குடம் கொடுத்தானான வன்னிய தேவேந்திர மலையமான் என்பது இவனுடைய முழுப்பெயர். இராசராசச் சேதிராயனின் அதிகாரிகளில் இவன் முதன்மையானவன். இவன் திருக்கோவலூர்க்கு அண்மையில் உள்ள நெற்குணம் என்னும் சிற்றூர்ச்சிவன் கோயிலில் மண்டபம் ஒன்று எடுப்பித்தான்.[62] இது கி.பி. 1173 ஆவது ஆண்டில் நிகழ்ந்ததாகும்.

கடகத்துக்கண்டன் என்னும் பெயருடைய நந்தவனத்தின் பொருட்டு, திருக்கோவலூர்ச் சபையாரிடம் 633 குழி நிலங்களை விலைக்கு வாங்கி, அவற்றைத் திருவரங்கத்து அமுதனாருக்கு வழங்கினான்.[63] இராமானுச முனிவர் மீது இராமானுச நூற்றந்தாதி என்னும் பிரபந்தம் பாடிய திருவரங்கத்து அமுதனார் இவரே என்றும் கூறுவர்.[64]

## ஆகாரசூர மலையமான்

கண்ணன்சூரன் என்பது இவனுடைய இயற்பெயர். கண்ணன்சூரனான ஆகாரசூர மலையமான் என்பது இவனது முழுப்பெயர். ஆகாரசூரன் என்பதன் பெயர் விளக்கம் பற்றி அறிந்துக் கொள்ளக் கல்வெட்டுச் சான்று கிடைக்க வில்லை. இவன் சித்தலிங்கமடம் பதியில் அதிகாரியாக விளங் கினான். அவ்வூர்ச் சிவபெருமானுக்கு கி.பி. 1177 ஆவது ஆண்டில் இவன் உலோகப்பானை ஒன்று வழங்கியுள்ளான். 65

## காமன் சேதிராயன்

இவன் கிளியூர் மலையமான் காமன்மலையன் சேதிராயன் என்று கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளான். முடிகொண்ட சோழ மலையகுல ராயன் என்ற வேறு பெயரும் இவனுக்கு உண்டு.

திருக்கோவலூர் திருஇடைக்கழி எம்பெருமான் கோயி லில் திருப்பூமண்டபம், திருக்காக்கள்ளி ஆகியவற்றைக் கருங்கல்லால் எடுப்பித்து, அவற்றைப் பராமரிக்கும் பொருட்டு, சோமாசிகீரனூர் என்னும் ஊரில் ஒரு வேலி நிலத்தைக் கொடையாக நல்கினான். இதனை மூன்றாம் குலோத்துங்க சோழனின் 5ஆவது [கி.பி.1183] ஆண்டுச் சாசனம் புலப்படுத்துகிறது. 66

## முதலாம் இராசராசக் கோவலராயன்

இராசராசக் கோவலராயன் இரண்டாம் இராசராசச் சேதிராயனுக்குப் பூமாழ்வியின்பாற் பிறந்த மலையமன்னன், கி. பி. 1181 ஆவது ஆண்டுமுதல் 1221 ஆவது ஆண்டு வரை யிலும் இவனைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. ஆதலின், இவன் 40 ஆண்டுகள் மன்னனாக விளங்கினான் என்பது போதரும். இம்மன்னனுக்குத் திருக்கோவலூர் தலைநகராக விளங்கியது.

## தொண்டு

இவனும் இவன் தந்தையுமாகச் சேர்ந்து பல்வேறு அறங்களைச் செய்துள்ளனர். கோவலராயன் மக்களுக்குக் குடிநீர் வசதி செய்வதையும், உழுதொழில் சிறக்க நிலங்களுக்குப் பாசன வசதி செய்வதையும் கருத்திற்கொண்டு காரியமாற்றினான். கி. பி. 1181 ஆவது ஆண்டில் அத்திப்பாக்கம் என்னும் சிற்றூரில் நீர்நிலை ஒன்று அமைத்த செய்தி அங்குள்ள கல்வெட்டினால் புலனாகிறது.67

தன் தாயான பூமாழ்வின் பெயரால் கொல்லியூர், பாலூர், புத்தூர் முதலான ஊர்களில் பாசனத்திற்காகக் கால்வாய்கள் அமைத்தான். இதனை அறையணி நல்லூர்க் கல்வெட்டினால் அறியலாம்.68 பூமாழ்வியும் இவ்வாறே நீர்நிலைகள் அமைத்த செய்தி அங்குள்ள மற்றொரு கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது.69

## நிவந்தங்கள்

விழாக் காலங்களில் கோவலூர் இடைக்கழி ஆழ்வாரைச் சேவிக்கும் பொருட்டு, சித்திரமேழி மடத்தில் வந்து தங்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உணவு வழங்க வேண்டி, இவனும் இவன் தந்தையுமாகச் சேர்ந்து ஒரு நிலத்தை விலைக்கு வாங்கி மானியமாக வழங்கினர்.70 இச்செய்தி முன்னரே விளக்கப்பெற்றுள்ளது.

கோவலராயன் கி. பி. 1200 ஆண்டில் அறையணி நல்லூர் அண்ணலுக்கு மூன்று நந்தா விளக்குகள் எரிக்க 1500 குழி நிலங்களை விளக்குப் புறமாக வழங்கினான்.71 கோவலூர் வீரட்டான முடையார்க் கோயிலிலுள்ள சேதி நாயகன், நாச்சியார், பெரியானைப் பிள்ளையார் [விநாயகர்] அழகிய பிள்ளையார் [சுப்பிரமணியர்] ஆகியோரைத் தைத் திருநாளில் உலாவாக எழுந்தருளச் செய்யவும், திருவமுது உள்ளிட்ட நித்த நிவேதனங்களுக்கும் நிலக்கொடை வழங்கினான்.72

சேதிராயர் உள்ளிட்ட மேற்கூறிய நான்கு திருமேனி களும் ஐயர் ஒற்றியாழ்வார் புலவரடியான் என்பவனால் நிறுவப் பெற்றவையாகும். இவ்வாழ்வானுக்கு இராசராசச் சேதி ராயன் சேனை மீகாமன் என்ற சிறப்புப் பெயரும் உள்ளது. இவன் கோவலராயனின் சேனாதிபதியாக இருத்தல் வேண்டும். இவன் நிறுவிய சேதிநாயகர், நாச்சியார் படிமங் கள் முறையே இராசராசச் சேதிராயன், பூமாழ்வி ஆகியோரின் படிமங்களாகவே இருத்தல்கூடும். இவை உலோகத்தால் வார்க்கப்பெற்றவை என்பது குறிப்பிடத் தக்கது.

## இராசராச மலையகுலராயன்

இராசராச மலையகுலராயன் மூன்றாம் குலோத்துங்க சோழனின் ஆட்சிக்காலத்தில் [கி. பி 1178—1218] வாழ்ந் தவன். இவனைப்பற்றிய கல்வெட்டுகள் கி. பி. 1184 முதல் 1191 முடிய கிடைக்கின்றன. இவனுக்குச் சூரிய தேவன், சூரியன் நீரேற்றான், சூரியன் நீரேற்ற பெருமாள், எதிரிகள் நாயன், சோழங்க தேவன் முதலான சிறப்புப் பெயர்களும் கல்வெட்டுகளில் காணப்பெறுகின்றன.

மலையநாட்டின் ஒரு பகுதியில் ஆட்சி செலுத்தும் உரிமை இவன் முன்னோரால் இவனுக்கு நீர் வார்த்து [தாரை வார்த்து] வழங்கப்பெற்றமையால் நீர் ஏற்றான் என்ற சிறப்புப் பெயர் இவனுக்கு வழங்கியதாகக்கொள்ள லாம். அல்லது சைவ சமயத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டு விளங்கிய காரணம்பற்றி இவனுக்கு வழங்கி வந்த 'நீறு ஏற்றான்' என்னும் சிறப்புப்பெயர், கல்வெட்டுகளில் நீர் ஏற்றான் என்று தவறாகவும் பொறிக்கப்பட்டிருக்கலாம். அறிஞர்கள் இதுபற்றி ஆராய்ந்து முடிவு காண்பார்களாக.

தனக்கென்று வேளக்காரப் படையினரை நியமித்துக் கொள்ளும் உரிமையும், தனது ஆட்சிக்கு உட்பட்ட இடங் களில் நிலக்கொடை வழங்கும் உரிமையும் இவனுக்கு

இருந்தன. மலையநாட்டில் சிறந்து விளங்கிய ஊர்களில் ஒன்றான இறையானரையூர்ப் பகுதியில் இவன் ஆட்சி செலுத்தினான். அவ்வூர் இக்காலத்தில் எலவானாசூர் என்னும் பெயருடன் திருக்கோவலூருக்குத் தெற்கே 30 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## கொடைகள்

இறையானரையூரான சோழ கேரளச் சதுர்வேதி மங்கலத்து ஊர்பாகங்கொண்டருளிய நாயனார்க்கும், அவ்வூரிலுள்ள நடுவில் திருமுற்றத்தாழ்வார்க்கும், திருச்சக்கரத்தாழ்வார்க்கும், ஒகையார்க்கும் புத்தூர் உள்ளிட்ட ஊர்களில் . தேவதானங்களாக விளங்கிய நிலங்களுக்கு வரி விலக்கு அளித்து, அவற்றை இறையிலி தேவதானங்களாக மாற்றினான். இவனுக்கும் இவன் வழியினர்க்கும் நன்மை உண்டாகுமாறு இவ்வாறு செய்தனன் என்று எலவானாசூர் ஓட்டைக்குளப் பாறைக் கல்வெட்டுக் கூறுகிறது, இது மூன்றாம் குலோத்துங்க சோழனின் 6 ஆவது [கி.பி. 1184] ஆண்டில் வரையப்பெற்றதாகும்.73

அதே ஆண்டில் ஊர்பாகங் கொண்டாரின் திருவமுது படிக்கும் திருமேற்பூச்சுக்குமாக தமக்கு வரும் வரிகளை மூலதனமாகக் கொடுத்தான். இக்கோயில் இராஜகோபுரத்துக்கு முன்பு திருமாளிகை ஒன்றும் எடுப்பித்தான்.74 இம்மாளிகை இக்காலத்துச் சுவடற்றுப் போனது வருந்தத்தக்கது.

இம்மன்னன் சித்தலிங்கமடம் திருப்புலிப்பகவநாயனார்க்கும், திருப்பாலைப்பந்தல் திருநாகேஸ்வரமுடையார்க்கும் நிலக்கொடை வழங்கிய செய்தி, ஆங்காங்கே உள்ள கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளன.75

கி. பி. 1185 ஆவது ஆண்டில் திருவெண்ணெய் நல்லூர் ஆட்கொண்டருளிய தேவர் பாலாடியருள 10 பசுக்களையும் திருக்கோவலூர் வீரட்டானமுடையார்க்கு 7 விளக்குகள்

எரிக்க 224 பசுக்களையும் தானமாக வழங்கினான்.76 திருமால் புரம் மணிகண்டேஸ்வரர்க் கோயிலில் உத்தம சோழீஸ்வர முடையாரை எழுந்தருளுவித்த சேதிராயன் இம்மன்னனாகவே இருத்தல் வேண்டும்:77

## பாதுகாப்பு உடன்படிக்கை

இராசராச மலையகுலராயனும் இராசராச தேவன் பொன் பரப்பினான் ஆன குலோத்துங்க சோழ வாணகோ வரையனும் மூன்றும் குலோத்துங்கனின் 13ஆவது [கி. பி. 1191] ஆண்டில் தமக்குள் பாதுகாப்பு உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டனர். இவ்வொப்பந்தத்தில்,

"இவற்கு வினை உண்டாயதாகில் என் முதலிகளும் படையுங் குதிரையும் புகவிட்டு என் வினையாக ஏற்பேனாக" என்று வாணகோவரையன் உறுதி கூறுதல் உளங்கொளத் தக்கது.78 இவ்வாணகோவரைய்ன் இரண்டாம் இராசராசச் சேதிராயனுடனும் இத்தகைய உடன்படிக்கையைச் செய்து கொண்டமையை முன்னர்க் குறிப்பிட்டுள்ளோம்.

## வேளக்காரர்

இரண்டாம் இராசராசச் சேதிராயனைப் போலவே இவனுக்கும் வேளக்காரப் படையினர் இருந்தனர். இவன் பால் அன்பும் பற்றும் கொண்ட இப்படையினர் சிலரின் உறுதிமொழிகள் எலவானாசூர்க் கோயிலில் உள்ளன. இவர் களில் தேவப்பெருமாள் என்னும் பெயருடைய பெண் ணொருத்தி கூறிய உறுதிமொழி சுவையானது. அக்கல் வெட்டுப் பின்வருமாறு:

1. "ஸ்வஸ்திஸ்ரீ இரா[ஜ]ரா[ஜ] மலையகுலராயநான நீரேற்ற பெருமாளான எதிரிகள் நாயநுக்கு.
2. இவ்வேளக்காரியான தேவப்பெருமாளேன் எதிரி கள் நாயனுக்குப் பின்பு இருந்தேநாகில் என்மாடு ஓட்டி மாற்கு மண்டைய்யுமிட்டு இ

3. வர்களுக்கு நீருங்குடுத்து இவர்கள் கலச்சோற்றை யும் உண்கிறேன் என்மிளுளன் ஒடு என்[னை]ச் சாவ வேண்டா மென்பார் என்மி

4. ளுளன் ஏறுகிற குதிரைக்குப் புல்லு இடும் காமிகந் எதிரிகள்நாயக முதுமையானுக்கு தன் மிளுட்டி யையுங் குடுப்பான் நா

5. ந்செயாதிருந்தே நாகில் என்னை நெருப்பில் கட்டி புகடுதல் கொல்லுதல் செய்யாதவன் தன் ளுட்டை யாற்கு தந்மிளுட்டி யையுங் குடுத்து என்

6. மிளுளன் ஏறுகிற குதிரைக்கு புல்லு இடுகிற காமிசநான எதிரிகள் நாயக முதுமையானுக்கு தன் மிளுட்டியை குடுப்பான் என்னைக் கண்டால் கொல்லாதான்''

இவளே யன்றி திரிகையுடையான், தேவப்பிள்ளை, ஆளுடை யான், சூரியன் முதலானோரின் உறுதிமொழிகளும் உள்ளன. இவற்றில் பொதுவாகவே நாட்டுப்புற வழக்குகள் மலிந் துள்ளமையைக் காணலாம்.79

## முதலாம் இராசகெம்பீரச் சேதிராயன்

இரண்டாம் இராசாதிராச சோழன் மூன்றும் குலோத் துங்க சோழன் ஆகிய சோழ மன்னர்களின் ஆட்சிக்காலங் களில், அவர்களுக்கு அடங்கி ஒழுகிய மலையமன்னர்களில் முதலாம் இராசகெம்பீரச் சேதிராயனும் ஒருவன். கி.பி. 1165 முதல் 1184 வரை இவனைப்பற்றிய செய்திகள் கிடைக் கின்றன. இராசகெம்பீரன் என்னும் மூன்றும் குலோத் துங்க சோழனின் பெயரைத் தனக்குரிய பெயராகக் கொண்டவன்.

இவனுக்கு அத்திமல்லன் சொக்கப் பெருமாள், சொக்கப் பெருமாள் பொன் பரப்பினுன் என்ற சிறப்புப் பெயர்களும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. பிற்காலத்தில் இதே பெயருடைய வேருெரு சேதிராயனும் இருந்துள்ளான். ஆதலின், இவனை முதலாமவன் என்று அழைக்கிருேம். இரண்டாம் இராசராசச் சேதிராயன், இராசராச மலைய குலராயன் ஆகியோரைப் போலவே இவனுக்கும் வேளக் காரப் படையினர் உண்டு.

இம்மன்னன் சித்தலிங்கமடம், அறையணி நல்லூர் ஆகிய பகுதிகளில் ஆட்சிப்பொறுப்பினை மேற்கொண்டிருந் தான். சித்தலிங்கமடம் என்னும் ஊர் கல்வெட்டுகளில் சிற்றின் கூர் என்று குறிக்கப் பெறுகிறது. இது திருக்கோவ லூருக்குக் கிழக்கே 11கி. மீ தொலைவில் உள்ளது. இங்குக் கோயில் கொண்டுள்ள சிவபெருமானைத் திருப்புலிப்பகவ நாயனுர் என்று சாசனங்கள் கூறுகின்றன. இராசேந்திர சோழனின் அமைச்சனுன மணவில் சபாநர்த்தகன் என்பவன், இக்கோயிலைக் கற்றளியாக எடுப்பித்தான்.80 இவனுக்குக் காலிங்கராயன், மானுவதாரன் முதலான சிறப்புப் பெயர் களும் உள்ளன.

இக்கோயிலுக்கு இம்மலைய மன்னன் பொன் பரப்பின காரணத்தால், 'சொக்கப் பெருமாள் பொன் பரப்பினுன் ஆன இராச கெம்பீரச் சேதிராயன்' என்று அழைக்கப் பெற்றுன் போலும்.

## கொடைகள்

சிற்றின்கூர் திருப்புலிப் பகவ நாயனுர் திருவமுது செய்தருள கி. பி. 1165 ஆவது ஆண்டில் இவன் நிலக் கொடையும், பாடிகாவல் வரிகளையும் வழங்கினுன்.81 இதே ஆண்டில் குடிமக்கள் தனக்குச் செலுத்த வேண்டிய வரி களைப் புதுப்பேரூர் உத்தரீசுவரமுடைய நாயனுர்க்கும் அறை யணி நல்லூர் அண்ணலுக்கும் நல்கினுன்.82 இவை $1\frac{1}{2}$ வேலி நிலங்களிலிருந்து வசூலிக்கத்தக்க வரிகளாகும்.

திருக்கோவலூர் திரு இடைக்கழி ஆழ்வார்க்கு நித்த நிவேதனங்கள் உள்ளிட்ட தேவைகளுக்காக, ஊர்ச்சபை யாரிடம் இரண்டு வேலி நிலங்களை விலைக்கு வாங்கி அவற்றை இறையிலியாக்கினான்.83 இரண்டாம் இராசராசச் சேதிராயனின் கொடையைக் குறிக்கும் கல்வெட்டு ஒன்றிலும், இராசகெம்பீரன் வழங்கிய இரண்டுவேலி நிலங் களும் எல்லைகளாகக் கூறப்பெறுகின்றன.

"மேல்பாற்கெல்லை அத்திமல்லன் சொக்கப் பெருமா ளான இராசகெம்பீரச் சேதிராயன் இவ்வூர் சபையார் பக்கல் பொன்னிட்டுக் கொண்டு திருவிடையாட்டமாக இறையிலி செய்து விட்ட நிலம் இரண்டு வேலிக்குக் கிழக்கும்"

என்பது அக்கல்வெட்டின் பகுதியாகும். திருநறுங் கொண் டைத் தேவர் அப்பர்க்கும் பாழியிலாழ்வார்க்கும் திருவமிர்து படிக்காகச் சில ஆயங்களை விட்டுக் கொடுத்த செய்தி அங்குள்ள கல்வெட்டு ஒன்றில் குறிக்கப்பெற்றுள்ளது84 இது சமணக்கோயில் என்பது குறிப்பிடத்தக்கது.

### வேளக்காரன் கொடை

கி. பி 1184 ஆவது ஆண்டில் இவனுடைய வேளக்காரப் படையைச் சேர்ந்த ஒருவன், இச்சேதிராயனின் நன்மை யைக் கருதி, சிற்றின்கூர்ச் சிவபெருமானுக்கு இரண்டு நந்தா விளக்குகள் எரிக்க நிலக்கொடை வழங்கியுள்ளான்.85 இச்செய்தி இவன் உடல்நலம் குன்றியிருந்தமையைக் குறிப்பால் உணர்த்துகிறது. இவ்வாண்டுக்குப் பின்னர் இவனைப்பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் காணப் பெறுமையால், இவன் அவ்வாண்டில் உயிர் நீத்தான் எனக் கொள்ளலாம்.

## இரண்டாம் இராசராசக் கோவலராயன்

இக்கோவலராயன் மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந்த மலையமன்னன். இவனுக்குக் கூகுடை

யான் இராமன் பொன் பரப்பினுன் என்ற சிறப்புப்பெயரும் இருந்துள்ளது. இவன் தென்னுர்க்காடு மாவட்டம் கள்ளக் குறிச்சிவட்டம் குகையூர் என்னும் ஊரிலிருந்து மலைய நாட்டின் ஒரு பகுதியை ஆண்டு வந்தான். இம்மன்னன் பங்குனித்திங்கள் விழாவின் பொருட்டுப் பல்வேறு அறங்களை இயற்றியுள்ளான். ஆதலின் இவனை அத்திங்களில் பிறந்தவனுகக் கொள்ளலாம். ஆறகளூர் வாணகோவரைய ருடன் மணஉறவு கொண்டு, தனக்குச் சிறந்ததொரு துணை வலியை உருவாக்கிக் கொண்டான்.

## புண்ணியவாட்டி

கோவலராயன் தன்மகள் புண்ணியவாட்டி என்பவளை, ஆறகளூர் இராசராச வாணகோவரையனுக்கு மணம் செய் வித்தான். இவ்வம்மையார் ஆறகளூர் கரிவரதராசப் பெருமாள் கோயிலைக் கற்றளியாக எடுப்பித்து, அதற்கு இராசராச விண்ணகர் என்று தன் கணவனின் பெயரை இட்டு வழங்கினுள். சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் ஆறகளூர்க் கரிவரதராசர்க் கோயிலிலுள்ள சாசனம் ஒன்று இதனைக் கூறுகிறது.86

## பொன்பரப்பினுன் இராசராசதேவன்

புண்ணியவாட்டியார் தான் பிறந்த மலையநாட்டுத் திருப்பாலைப்பந்தல் திருநாகேஸ்வரமுடையார்க்கு, கி. பி. 1198ஆவது ஆண்டில் இறையிலி தேவதானமாகச் சில நிலங்களை வழங்கினுர். இராசராசவாணகோவரையனுக்குப் புண்ணியவாட்டியின்பாற் பிறந்தவன், ஆறகளூருடைய பொன் பரப்பினுன் இராசராச தேவனுன மகாதேசன் ஆவான்.87

## பொன்பரப்பின ஈச்சரம்

இவன் கூகையூரில் பொன் பரப்பின ஈஸ்வரம் என்னும் பெயரில் சிவன்கோயில் ஒன்றைக் கற்றளியாக எடுப்பித்

தான். அக்கோயிலில் அர்த்தமண்டபம், ஸ்நபன மண்டபம், நிருத்த மண்டபம், முதல் இரண்டாம் பிரகாரங்கள், கோபுரங்கள் ஆகிய அனைத்தையும் நிறுவினான். நித்த நிவேதனங்களுக்கு நிலக்கொடையும் வழங்கினான்.88

கி. பி. 1207 ஆவது ஆண்டில் இவன் படைத்தலைவன் ஒருவன், பொன் பரப்பின ஈஸ்வரமுடையார்க்குக் கோதானம் செய்தான்.89 பொன் பரப்பின நல்லூர் என்னும் சிற்றூரும், கற்பூண்டியான திருஞான சம்பந்த நல்லூர் என்னும் சிற்றூரும் அக்கோயிலுக்குத் தேவதானங்களாக வழங்கப்பெற்றன. இவற்றுள் கற்பூண்டி என்பது பங்குனி மாத விழாவின் பொருட்டுக் கொடுத்ததாகும்.90

## வீரராசேந்திரச் சேதிராயன்

இவன் மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந்தவன். கிளியூர் மலையமான் ஆகாரசூரன் என்றும் இவன் அழைக்கப் பெற்றான். இவனும் இரண்டரம் இராச ராசச் சேதிராயனுமாகச் சேர்ந்து, திருக்கோவலூர்த் திருக்குகனீஸ்வரமுடையார்க்கு நிலதானங்கள் வழங்கிய செய்தியை முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.91

## மருந்தன் அழகிய நாயன்

மருந்தன் அழகிய நாயன் மலையமான் என்னும் பெய ருடைய படைத்தலைவன் ஒருவன், வீரராசேந்திரச் சேதிராய னின் கீழ்ப்பணியாற்றினான். இப்படைத்தலைவன் திருக் கோவலூர் இடைக்கழி ஆழ்வார்க்கு விளக்குத்தானமாகப் பசுக்களை வழங்கியுள்ளான். இளையான் குடி என்னும் ஊரைச் சேர்ந்த கங்கதரையன் திருவன் காலிங்கராயன் என்பவனுக்கு இவன் மருமான் என்று திருக்கோவலூர்க் கல்வெட்டுக் கூறு கிறது.92

# மலையமான் நாடு

## (சிறப்புப் பெற்ற ஊர்கள்)

(வடார்க்காடு மாவட்டம்)
சம்புவராயர் நாடு
வந்தவாசி
திருப்பத்தூர்
போளூர்
சேத்துப்பட்டு
பெரும்பாணப்பாடி
செங்கம்
திருவண்ணாமலை
செஞ்சி
சிங்கபுரநாடு
தென்பெண்ணை ஆறு
அதியர் நாடு
விழுப்புரம்
திருக்கோவலூர்
கள்ளக்குறிச்சி
ஆத்தூர்
விருத்தாசலம்
(சேலம் மாவட்டம்)
மகதமண்டலம்
திட்டக்குடி
(திருச்சி மாவட்டம்)





நெய்வனைச் சிவன் கோயிலுக்கு
எதிரில் உள்ள சிற்பங்கள்

மலைய மன்னர்கள்
நானூற்றுவன் மலையனான இராசேந்திரசோழச்
சேதிராயனும்
கிளியூர் மலையமான் விக்கிரமசோழச் சேதிராயனும்



Copy.Right-French Institute of Indology, Pondicherry.

அறையணி நல்லூர்

ஒப்பொருவருமில்லா நாயனார்க் கோயில்



Copy Right-French Institute of Indology, Pondicherry.

எலவானாசூர்

ஊர்பாகங் கொண்டருளிய நாயனார்க் கோயில், இராசகோபுரம்.





சம்பை

தான்தோன்றீச்சுரம் கோயில்





காளத்தி

காளத்தீச்சுரம் கோயில்

குறிப்பு : பார்கவ கோத்திரத்து பராந்தக இயாதவ வீமனை
கல்வெட்டின் முதற் பகுதி. இது எலவானசூர்ச் சிவன்



இக்கல்வெட்டுப்

ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீசோழ கேரள தேவர்க்கு யாண்டு
ற(த்)து ப்ரம்ஹதேயம் இறையாநரையூர் ஸபையோம் இவ்வூர்
டையார் பார்கவ கோத்திரத்து பராந்தகந் இயாதவ வீமநா
தமா(க்ர)ம் பெ(ரு)ந் திருவமுதுக்குப் — — க்கரிசி நாநாழியும்
ரை பதின்பலமும் நெய்யமுது உழக்கரையும் அடை(க்)காயமுது
தசாமத் திருவமுதுக்கு அரிசி நாநாழியும் பொரிக்கறி யமுதும்
பாக்கு நாலும் இலையமுது பத்தும் ஆக இத்தனையிலும்

உத்தம சோழ மிலாடுடையாரின் கொடைபற்றிக் கூறும்
கோயிலின் வடக்குச் சுவரில் உள்ளது.

பகுதியின் வாசகம் :

3வது மலாடாந ஜனநாத வளநாட்டு பரனூற் கூற்

ஊருடைய மஹாதேவர்க்கு மலாடு

உத்தம சோழ மலாடுடையார் வைத்த உத்

தூரப்பருப்பு நாநாழியும் பால் குறுணியும் சற்க

பாக்கு நாலும் இலையமுது பத்தும் அத்

நெய்யமுது ஆழ(ா)ங்கும் அடைக்காயமுது

இப்பாலமுதுக்கும் நெய்யமுதுக்கும் உடையா

குறிப்பு : கிளியூர் மலையமான் பெரிய உடையான் நீரேற்றானை இராசராச மலையகுல ராயனைக் குறிப்பிடும் கல்வெட்டின் இடைப்பகுதி. இது எலவானாசூர்ச் சிவன் கோயிலின், இரண்டாவது கோபுரத்நுத் தெற்குத் திண்ணையில் உள்ளது.

இக்கல்வெட்டுப் பகுதியின் வாசகம் :

ஸ்ரீ ராஜராஜ தேவற்கு யாண்டு 13வது . . . 14 நால் ஆயிரத்தளியிற் கோயி
(கி)ளியூர் மலையமான் பெரிய உடையான் நீரேற்றானை ராஜராஜ மலையகுலராயன்
மலாடான ஜனநாத வளநாட்டுப் பரநூற்கூற்றத்து இறையா நரையூரான
ற்கு வேண்டும் நிமந்தங்களுக்கு இறுப்பதாக இவ்வூர்ப் பிடாகை அரும்புலிபாடி





திருக்கோவலூர்

திரு இடைக்கழி ஆழ்வார்க் கோயில்





திருநாமநல்லூர்
பக்தசனேச்சுரம் கோயில்





திருப்பாலைப்பந்தல்

நடுவறிவார்க்கோயில் இராசகோபுரம்





திருவாமாத்தூர்
அபிராமேச்சுரம் கோயில்





நெய்வனை

பொற்குடம் கொண்டருளிய நாயனார்க் கோயில்

## காலிங்கராயன்

இக்காலிங்கராயன் வீரசேகரக் காடவராயனின் படைத்தலைவனாவான். இவன் திருவதிகை வீரட்டானேஸ்வர முடையார்க்கும் திருக்கோவலூர் இடைக்கழியார்க்கும் முறையே பசுக்களையும் ஆடுகளையும் தானமாக வழங்கியுள்ளான். இவ்வறச் செயல்களை ஆங்காங்கே உள்ள கல்வெட்டுகளால் அறியலாம்.93 வீரராசேந்திரச் சேதிராயன் காலத்துப் பிற செய்திகளை அறிந்துகொள்ளத் தக்க சான்றுகள் இல்லை.

## இரண்டாம் கரிகாலச் சோழ ஆடையூர் நாடாழ்வான்

மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந்தவனான இம்மலையகுல மன்னன் வடார்க்காடு மாவட்டம் திருவண்ணாமலை வட்டம் செங்கண்மா என்னும் ஊரிலிருந்து அதனைச் சார்ந்த பகுதிகளில் ஆட்சி செலுத்தினான். இவனுக்கு மலையன் வினைவென்றான் என்ற வேறு பெயரும் உண்டு. மூன்றும் நரசிங்க வர்மன், இம்மன்னனின் தம்பி என்று கல்வெட்டுக் கூறுகிறது.94

## உடன்படிக்கைகள்

திருவண்ணாமலை வட்டம் ஆடையூர் செங்கண்மா ஆகிய ஊர்களில் இருந்த மலையமான்கள், அப்பகுதியின் வலிமையுடன் விளங்கிய சம்புவராயர் குலத்துக் குறுநில மன்னர்களோடு பாதுகாப்பு உடன்படிக்கைகள் செய்துகொள்வதில் முனைப்பாக இருந்துள்ளனர். அவர்களுடன் மண உறவும் கொண்டனர்.

மூன்றும் குலோத்துங்க சோழனின் 20 ஆவது [கி.பி 1198] ஆண்டில், இக்கரிகாலச் சோழ ஆடையூர் நாடாழ்வான், சம்புவராயர் குலத்து அம்மையப்பன் அத்திமல்லன்

என்பவனோடு பாதுகாப்பு உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொண்டான்.

பின்னும் செங்கேணி அம்மையப்பன் அத்திமல்லனான விக்கிரம சோழச் சம்புவராயனுடனும், சேரர்மரபினனான விடுகாதழகியனுடனும் கூட்டாகப் பிறிதொரு ஒப்பந்தம் இயற்றினன். இவற்றின் வாசகங்களை செங்கண்மா இரிஷபேஸ்வரர்க் கோயிலில் காணலாம்.95 தனது குலத்து மன்னனான இராச கெம்பீரச் சேதிராயனுடனும் இவ்வாறே ஒப்பந்தம் செய்து கொண்டான்.96

### நிலக்கொடை

செங்கண்மா இரிஷபேஸ்வரர் திருவமுது செய்தருளவும் பிற தேவைகளுக்குமாக இவ்வாடையூர் நாடாழ்வான் கி.பி. 1206 ஆவது ஆண்டில் நிலக்கொடை வழங்கிய செய்தி அங்குள்ள சாசனம் ஒன்றில் காணப்பெறுகிறது. 97

## மூன்றும் நரசிம்மவர்மன்

மூன்றும் குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த மலைய மன்னர்களில் மூன்றும் நரசிம்மவர்மனும் ஒருவன். ஆடையூர் நாட்டின் மற்றொரு பகுதி இவனுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. ஆடையூர் நாடுடைய மலையன் நரசிங்கபன்மரான கரிகாலச்சோழ ஆடையூர் நாடாழ்வான் என்பது இவனுடைய முழுப்பெயர். பொதுவாகவே ஆடையூர்ப் பகுதியில் இருந்த மலையமான்கள் கரிகாலச்சோழர் என்றே குறிக்கப்பெறுகின்றனர். இம்மன்னனுக்குப் பெரியுடையான் என்றும், அரசநாயன் என்றும் மக்கள் இருவர் இருந்தனர்.98

இரண்டாம் இராசாதிராச சோழன், மூன்றும் குலோத்துங்க சோழன் ஆகியோரிடம் இவன் சிறந்த படைத்தலைவ

னாக விளங்கினான். இந்நரசிம்மவர்மன் இரண்டாம் இராசாதிராசனின் ஆட்சிக் காலத்தில், திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பிப் பல்லவராயனோடு பாண்டிநாடு சென்று ஈழநாட்டுப் படையுடன் போரிட்டு வாகை சூடினான்.99 இவன் குறுநில மன்னர் பதினொருவருடன் பாதுகாப்பு உடன்படிக்கையும் செய்துள்ளான்.100

## கொடைகள்

இவன் கி.பி. 1205 ஆவது ஆண்டில் திருவண்ணாமலை உடைய நாயனார்க்குத் திருமடைப்பள்ளிப் புறமாக விடான் பற்றில் வேங்கைக் காவையும், எயில் நாட்டில் நரசிங்கநல்லூரையும் தேவதானமாக வழங்கினான். 101 இம்மன்னனைப் பற்றிய பிற செய்திகளை அறிந்து கொள்ள இயலவில்லை.

## இரண்டாம் இராசகெம்பீரச் சேதிராயன்

மூன்றாம் குலோத்துங்கனுக்கு அடங்கி ஒழுகிய மலையர்களில் இராசகெம்பீரச் சேதிராயனும் ஒருவன். சேதிராய நாயன், அழகியன், ஆகாரசூரன் திருவண்ணாமலைப்பெருமாள் முதலான பிற பெயர்களும் இவனுக்கு உண்டு. 102 திருக்கோவலூர் வட்டத்தின் ஜம்பைப் பகுதியும், திருவண்ணாமலை வட்டத்தின் தென்கிழக்குப் பகுதியும் இவனுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தன. இவனைப் பற்றிய கல்வெட்டுகள் கி.பி. 1192 முதல் 1205 வரை கிடைக்கின்றன.

பாவந்தீர்த்தானான ஆகார சூர மலையமான் என்பவன், இம்மன்னனின் படைத்தலைவனாக விளங்கினான். இப்படைத்தலைவனின் தந்தை வாணகோவரைய மலையமான் என்றும், தாய் நீலம்மை என்றும் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இவன் தன் தாயின் நலம் கருதி திருவண்ணாமலை உடையார்க்கு 600 குழி நிலங்களைத் தானமாக வழங்கினான் 103

## கொடைகள்

இராசகெம்பீரச் சேதிராயன் தனது ஆட்சிக் காலங்களில் சண்பைக் கோயில்களுக்கும், திருவண்ணாமலை அருணாசல முடையார்க்கும் பல தானங்களைச் செய்துள்ளான்.

குலோத்துங்க சோழனின் 14 ஆவது [கி.பி. 1192] ஆண்டில், வாணகப்பாடி பெண்ணை வடகரை சண்பையான வீரராசேந்திரபுரத்துத் திருக்கவாலீஸ்வரமுடையார்க்கு நிலக்கொடை யளித்த செய்தி அங்குள்ள சாசனம் ஒன்றினால் புலனாகிறது.104

கி.பி 1205 ஆவது ஆண்டில் சண்பை வைரீஸ்வர முடையாரான ஏரிவலஞ்செய்த நாயனார்க்கும் துர்க்கையார்க்கும் அந்தமலையமான்பட்டு என்னும் சிற்றூரை இவன் தேவதானமாகக் கொடுத்துள்ளான். இதனைச் சண்பைக்கு அண்மையில் உள்ளதே வரடியார்குப்பம் என்னும் சிற்றூர்ச் சாசனம் வெளிப்படுத்துகிறது. 105

திருவண்ணாமலை உடைய நாயனார்க்குத் திருமடைப் பள்ளிப் புறமாக, சோழனேற்கப்பிறந்தான் நல்லூரில் இவன் நிலக்கொடையும், இவன் அதிகாரி ஒருவன் நந்தா விளக்கு எரிக்க நிலக்கொடையும் வழங்கிய செய்திகள் கல்வெட்டுகளில் உள்ளன.106

இராசகெம்பீரச் சேதிராயனின் சிறப்புப் பெயர்களில் ஒன்றான ஆகாரசூரன் என்னும் பெயருடன், திருக்கோவலூரில் ஆகாரசூரவிண்ணகர் என்னும் திருமாற் கோயில் இருந்துள்ளது. 107 இது இம் மன்னனால் எடுப்பிக்கப் பெற்றதாக இருக்கலாம். இக்காலத்தில் இவ்விண்ணகர் சுவடற்று விட்டது.

## ஒப்பந்தங்கள்

ஏனைய மலைய மன்னர்களைப் போலவே இம்மன்னனும் பாதுகாப்பு ஒப்பந்தங்கள் செய்துள்ளான். இவை தன்

குலத்தவருடனும் தன்னையொத்த வேறு சில குறுநில மன்னர்களுடனும் நிகழ்ந்துள்ளன.

கி.பி 1197 ஆவது ஆண்டில் கூத்தாடுந்தேவன் பிரிதிவி கங்கன், மலையமான் வினைவென்றுனை ஆடையூர் நாடாழ்வான் ஆகியோருடன் கூட்டாக ஒரு பாதுகாப்பு உடன்படிக்கையும், கி. பி. 1206 ஆவது ஆண்டில் பெரிவலி படைத்த இரண்டாம் இராசராசச் சேதிராயனுடன் ஒரு பாதுகாப்பு உடன்படிக்கையும் செய்துள்ளான். 108

## குறிப்புகள்

1. Chieftains of Maladu, Dr. K.V. Raman (journal of the Madras University, vol. XLIX, No.1,p.5)
2. A.R.E. 1934-35, No .135&Part II, Para, 15
3. S.I.I., vol: VII, No. 875
4. ,, ,, 874
5. ,, ,, 133,879 & 989
6. A.R.E. 1908, No: 376 & 1909, No. 419
7. ,, ,, 373
8. ,, 1909 ,, 401
9. ,, 1908 ,, 375
10. ,, 1934-35, No. 161
11. தென்னிந்தியக்கோயிற் சாசனங்கள், தொகுதி–III, பகுதி–I, எண் 1214
12. A.R E., 1934-35,No, 132 &Part II; Para. 13

13. A.R.E. 1909, No. 388
14. ,, ,, 382
15. ,, 1937-38, No. 430
16. ,, 1909, No, 328
17. ,, ,, 408
18. வரலாற்று வடிவங்கள், கல்வெட்டு எண் 18—புலவர் சு. குப்புசாமி
19. S.I.I, vol, VII, No. 915
20. A.R.E. 1908, No. 371
21. ,, 1921, No. 349
22. S.I.I., vol, VII; No, 914
23. ,, ,, 913
24. ,, ,, 919
25. A.R.E. 1936-37, No, 259
26 ,, ,, 223
27. S.I.I. vol. VII, No. 136
28. A Topographical list, vol, I, No. 490
29. A.R.E., 1935-36, No. 41 & Part-II, Para 41
30. A.R.E. 1934–35, No.1 35 & Part II, para 15
31. S.I.I. vol. VII, No. 1022; A.R.E, 1934–35, No.1 35 & 1935-36, Port. II, Para 41
32. S.I.I., vol, VII, Nos, 1021&1022
33. A.R.E. 1935-36, No. 85 & Part II, Para 41
34. ,, 1934-35, No. 135 & Part II, Para 15
35. S.I.I., vol, VII, No, 1022

36. A R.E. 1934–35, No 190
37. ,, Part II, Para 16
38. வரலாற்று வடிவங்கள், பக் 75— புலவர் சு. குப்புசாமி
39. A.R.E. 1921, Nos, 480 & 481
40 ,, 1934-35, No 204
41. ,, 1913, No 440
42. வரலாற்று வடிவங்கள், கல்வெட்டு எண், 46 புலவர் சு. குப்புசாமி
43. A.R.E. 1934–35, No. 116
44. ,, ,, Part II, Para 16
45. ,, 1934-35, Part II, Para 16
46. ,, 1913, No 440
47. ,, 1934-35, No 163 & Port II, Para 16
48. ,, 1921, No 318(பின் இணைப்புக்கல்வெட்டு)
49. பின் இணைப்புக் கல்வெட்டு, எண் 4
50. A.R.E 1921, No. 311 [பின் இணைப்புக் கல் வெட்டு, எண் 6
51. A.R.E. 1921, No, 341 (பின் இணைப்புக் கல் வெட்டு, எண் 7
52. A.R.E. 1934-35, No 250
53. ,, ,, 245
54. தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள், தொகுதி III பகுதி I, எண் 1215
55. A Topographicol list, vol I, No 647

56. தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள், தொகுதி III
பகுதி I, எண் 46
57. „ „ எண் 1216
58. A Topographical list, vol I, No 652
59. A R E, 1934-35, Nos, 186 and 204
60. தென்னிந்தியக் கோயிற்சாசனங்கள், தொகுதி III
பகுதி I, எண் 1215
61. S.I.I., vol, VII, No, 922 & A.R.E. 1910, No,307
62. A.R.E. 1934-35, No, 215
63. „ 1921, No 315
64. சாசனத் தமிழ்க் கவி சரிதம், பக், 85-86—
திரு மு. இராகவையங்கார்
65. A R E 1909, No. 427
66. A R E 1921, No 345 (பின் இணைப்புக் கல்வெட்டு
எண் 8)
67. A R E 1937-38, No 381
68. „ 1934-35, No 180 & Part 2, Para 16
69. „ „ 11
70. „ 1921, No 341
71. S.I.I, vol, VII, No, 1021
72. „ „ 890
73. வரலாற்று வடிவங்கள், கல்வெட்டு எண் 42
புலவர் சு. குப்புசாமி
74. „ „ „ 44&49
75. A R E 1909, No 400 & S.I.I., vol VII, No. 172
76. S.I.I., vol. VII, No, 939 & A R E 1902, No 251
77. A R E 1906 No, 277

78. வரலாற்று வடிவங்கள். கல். எண். 45—
புலவர் சு. குப்புசாமி

79. வரலாற்று வடிவங்கள், க எ 50 to 54—புலவர் சு. குப்புசாமி & மலையமான் நாட்டுச் சாசனங்கள் புலவர் சு. குப்புசாமி (Revue Historique de Pondicherry, vol, XI. pp, 79 & 80)

80. A R E 1909, No 367

81. ,, ,, 411

82. ,, 34-35, No 134

83. ,, 21, No 322

84. ,, 39-40, No 317

85. ,, 1909, No 415

86. A R E 1913, No 447 & A Topographical list, vol, 2, No 40

87. S I I vol, VII, No I80

88. A R E 1918, no 93

89. ,, ,, 95

90. ,, ,, 94

91. S I I, vol, 7, no 922

92. A R E 1934-35, No 249 & Port 2, Para 17

93. A R E 1921, no 287 & 1934-35, No 244

94. S I I, vol, 7, no 118

95. A Topographical list, vol, 1, nos, 414 & 422

96. S I I, vol, 7, no 119 & Indian Epigrcphy Report, 1945-46, no 118

97. A Topographical list, vol, 1, no 494

98. S i i, vol, 7, no 118

99. பிற்காலச் சோழர் சரித்திரம் (1957) பாகம் 2, பக் 173—வித்துவான் திரு தி.வை. பண்டாரத்தார்

100. S I I, vol, 8, no 106

101. ,, ,, 128

102. A R E 1906, no 87

103 S I I, vol 8, no 124

104, A R E 1906, no 102

105. ,, 37–38, no 450

106. S I I, vol, 8, no 87 & A Topographical list, vol, I, no 489

107. S I I, vol, 7, no 128

108. A R E, 1934–35, no 189 & Part 2, Para 16

6

# கோப்பெருஞ்சிங்கன் காலம்

## [கி. பி. 1232—1243]

பிற்காலத்தில் பெருவலிமை படைத்தவனாகவும், சோழப்பேரரசின் அழிவுக்குக் காரணமாக விளங்கியவனும், மூன்றும் இராசராச சோழனைச் சிறைப்படுத்தியவனும், தென்னார்க்காடு மாவட்டத்துச் சேந்த மங்கலத்தைத் தலை நகராகக் கொண்டவனுமான பிற்காலப் பல்லவர் குலத் தோன்றல் கோப் பெருஞ்சிங்கன் காலத்திலும் சில மலைய மன்னர்கள் வாழ்ந்தனர்.

இக்கால கட்டத்தில் வாழ்ந்த மலையர்களைப் பற்றிய கல் வெட்டுகள் மிகவும் அருகியே காணப்பெறுகின்றன. இவர் கள் கோப்பெருஞ்சிங்கனின் வலிமையைக் கருதி அவனோடு உறவும் நட்பும் கொண்டிருந்தனர். சோழப் பேரரசின் அழிவுக்கு இத்தகைய கூட்டுறவும் காரணம் எனலாம். இரண்டாவது பாண்டியப் பேரரசின் காலத்திலேயே மலைய மான்கள் வலிமை குன்றினர். 1 கோப்பெருஞ்சிங்கன் ஆட்சியில் அவனுக்கு அடங்கி ஒழுகிய மன்னர்களாகவே இவர்கள் விளங்கினர்.

## மலயகுல-கோவலராயர்கள்

கோப்பெருஞ்சிங்கனின் 3 ஆவது [கி.பி.1235] ஆண்டில், குன்றமுடையான் மலையகுலராயன் என்பவனும், கோவலராயன் என்பவனுமாகச் சேர்ந்து, நெல்வாய்ப்பாக்கம் என்னும் ஊரிலுள்ள ஏரியில் குன்றமுடையான் கலிங்கு என்னும் பெயருடைய கலிங்கையும், இராசாக்கள் தம்பிரான் என்னும் பெயருடைய கால்வாயையும் அமைத்தனர். கீழ்ப்பட்டுச் சாசனம் ஒன்றில் இச்செய்தி வரையப் பெற்றுள்ளது. 2

## பொன் பரப்பினன்

கோப்பெருஞ்சிங்கனின் 14 ஆவது [கி.பி. 1246] ஆண்டில், மலையன் உடையான் பொன்பரப்பினன் கோவலராயன் என்னும் மலைய்குலத்து மன்னன் ஒருவன், சண்பைத் தான் தோன்றீஸ்வரமுடையார்க்கு ஏழாம் நாள் விழாச் செலவுக்காக நெல் தொகுதியை மூலதனமாக வழங்கியுள்ளான்.3 கோப்பெருஞ்சிங்கனின் 16 ஆவது [கி.பி. 1248] ஆண்டில் வாழ்ந்த கரியபெருமாள் சேதிராயன் என்பவன், 2000 குழி நிலங்களை வீரபாண்டியிலுள்ள திருமாற்கோயிலுக்கு வழங்கியுள்ளான்.4

## கூத்தாடுவான்

கூத்தாடுவானன சேதிராயன் என்னும் அதிகாரி ஒருவன் திருவண்ணாமலை உடைய நாயனார்க்கு 48 பசுக்களையும் நல்லெருதுகள் இரண்டையும் விளக்குத் தானமாக வழங்கியுள்ளான்.5 இப்பொழுது உள்ள சான்றுகளைக்கொண்டு, கோப்பெருஞ்சிங்கன் காலத்திய மலைய மன்னர்களைப் பற்றிய செய்திகளை விரிவாக அறிந்து கொள்ள இயலாது.

## குறிப்புகள்

1; Chieftains of Maladu, Dr K, V, Raman (Journal of the Madras University, vol, XLIX, no 1, p. 8)

2, A R E, 1826, no 275

3, S I I, vol, XII, no 282

4, „ „ 200

5. A Topographical list, vol. I, No. 469.



7

# பொதுச் செய்திகள்

## ஆட்சி முறை

சங்க காலம் தொடங்கிக் கோப்பெருஞ்சிங்கன் காலம் வரையிலும் வாழ்ந்த மலைய மன்னர்களைப் பற்றிய செய்திகளை இதுகாறும் உரைத்தோம். ஒரு சில காலங்களில்தான் ஒரு குறிப்பிட்ட மன்னனின் கீழ் மலைய நாடு இருந்துள்ளது. பெரும்பாலான காலகட்டங்களில், மலையமன்னர்களில் பலர் நாட்டைக் கூறிட்டே ஆண்டு வந்துள்ளனர். மலாடு இரண்டாயிரம் பூமியையும் இவர்கள் பங்கிட்டுக் கொண்டனர். இவர்களில் சிலர் மன்னர்களாகவும், பாடி காவவர்களாகவும், படைத் தலைவர்களாகவும் விளங்கினர்.

இவர்களின் ஆட்சிப் பகுதி சிறு சிறு பகுதிகளாக இருப்பினும், ஆங்காங்கே தனி உரிமையுடன் ஆட்சி செலுத்தினர். எனினும், தமக்குள் ஒன்றுபட்டுப் பாதுகாப்பு உடன்படிக்கைகள் செய்து கொண்டு, தம் நாட்டு எல்லையில் பகைவர்கள் நுழையாத வண்ணம் காத்துக் கொண்டனர். வாய்ப்புக் கிட்டிய போதெல்லாம் வாணகோவரையரின்

வாணகப்பாடியைத் தமது நாட்டோடு இணைத்து எல்லையை விரிவாக்கினர்.

எக்காலத்திலும் இவர்கள் பேரரசர்களுக்கு அடங்கியே ஒழுகி வந்தனர். எனவே, தமக்கென்று கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் வெளியிடும் உரிமை இவர்களுக்கு இல்லை. வாணகோவரையர்களில் சிலரும் காடவராயர்களில் சிலரும் சம்புவராயர்களில் சிலரும் தனியாட்சி நடத்துங் காலத்துக் கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் வெளியிட்டுள்ளனர் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

மலையமன்னர்களின் ஆட்சி அமைப்பு சோழப் பேரரசின் நிர்வாக அமைப்பின் ஒரு அங்கமாகவே இருந்துள்ளது. ஆதலின், இவர்களுக்கென்று தனித்த அல்லது வேறுபட்ட நிர்வாக அமைப்பு முறை இருக்கவில்லை.

## உரிமைகள்

தமது ஆட்சிக்கு உட்பட்ட இடங்களில் நிலக்கொடை வழங்கவும், வரி நீக்கம் செய்யவும், பெயர் மாற்றம் உண்டாக்கவும், விரும்பியவாறு ஒப்பந்தங்கள் செய்து கொள்ளவும் இவர்களுக்கு உரிமைகள் இருந்தன. சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில், மலையமன்னர்களில் ஒருவரேனும் மலையநாடு முழுமையிலும் மேலாதிக்கம் செலுத்தியமைக்குத் தெளிவான சான்றுகள் இல்லை. தம் குலத்து மன்னர்களுடன் மோதலின்றிப் பெரும்பாலும் ஒற்றுமையைக் காத்து வந்தனர். சோழப் பேரரசின் வீழ்ச்சி இவர்களுக்கும் வீழ்ச்சி ஆயிற்று. இவர்களிடம் குதிரைப்படை, காலாட்படை ஆகியவை இருந்தன. யானைப் படை, தேர்ப் படை உள்ளிட்ட பிற படைகள் இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை. ஆயினும், சங்க காலத்தில் வாழ்ந்த மலைய மன்னர்களிடம் தேர்ப்படைகள் இருந்தன.

இவர்களில் சிலர் அரசியல் காரணங்களுக்காக ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவியரை மணந்தனர். இவர்

களில் பட்டத்து அரசி பற்றித் தெளிவாக அறிந்து கொள்ள இயலவில்லை. இளவரசுப் பட்டம் பற்றி அறியவும் சான்றில்லை. பிற்காலத்து மலையமன்னர்களில் எவரும் மூவேந்தர்களைப்போல முடியணிந்தோராகக் குறிக்கப்பெற வில்லை. மூத்த புதல்வனுக்கு ஆட்சியில் முன்னுரிமை இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை.

## கொடை பெற்ற கோயில்கள்

மலையமான்களில் பெரும்பாலோர் சைவர்களாகவே இருந்தனர். எனினும், புறச் சமயங்களின்பால் வெறுப்பின்றிப் போற்றி வளர்த்தனர். இம்மன்னர்களின் கொடையைப் பெற்ற கோயில்களில் திருக்கோவலூர் வீரட்டானமும், இடைக்கழி ஆழ்வார்க் கோயிலும் குறிப்பிடத் தக்கவையாகும். இவையன்றி எண்ணற்ற சைவ வைணவக் கோயில்களுக்கும் பல்வேறு அறக்கட்டளைகளை நிறுவியுள்ளனர். துர்க்கையார் உள்ளிட்ட தேவதைகளுக்கும் மானியங்கள் வழங்கினர். சமயத் தொண்டு செய்து வந்த மடங்கள் பலவற்றுக்கும் தானங்கள் செய்தனர்.

## கற்றளிகள்

குலோத்துங்க சோழச் சேதிராயனால் அறையணிநல்லூரில் நிறுவப் பெற்ற பள்ளியறை நாச்சியார்க் கோயிலும், சேதிராயவேளான் என்பவனால் தொழுதூரில் நிறுவப் பெற்ற மதுராந்தக சோழீஸ்வரமும்,1 இரண்டாம் இராசராசக் கோவலராயனால் கூகையூரில் நிறுவப் பெற்ற பொன்பரப்பின ஈஸ்வரமும் மலையகுல மன்னர்களால் எடுப்பிக்கப் பெற்ற கற்றளிகளாகும். இவை அனைத்தும் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தைச் சார்ந்தவை. விக்கிரவாண்டி புவனேஸ்வரர்க் கோயிற் கல்வெட்டு கூறுகின்ற சேதிகுல சிந்தாமணீஸ்வரம் என்னும் சிவன் கோயிலும் சேதிபர் அமைத்ததாகும்.

### சமணப்பள்ளிகள்

மருத்துவக்குடி இராவதேஸ்வரர்க் கோயிற் கல்வெட்டு ஒன்றில் சேதிகுலமாணிக்கப் பெரும்பள்ளி குறிக்கப்பெறுகிறது.[3] திருவகத்தீஸ்வரம் நாகநாதசுவாமி கோயிற் கல்வெட்டு ஒன்றில் மிலாடுடையார் பள்ளி குறிக்கப் பெறுகிறது.[4] இவை இரண்டும் மலையகுலத்தவரால் நிறுவப் பெற்ற சமணப்பள்ளிகளாகும். திருநறுங்கொண்டை மலை மேலைப்பள்ளிகளும், சோழவாண்டிபுரம் ஆண்டிமலை அமண் கோயிலும் மலையமன்னர்களின் கொடையைப்பெற்ற சமணக் கோயில்களாகும்.

### கொடைகள்

சில கோயில்களில் இவர்கள் திருமேனிகளை நிறுவினர். வேறு சிலவற்றில் தமது முன்னோரின் படிமங்களை நிறுவினர். மாளிகைகள், மண்டபங்கள் ஆகியவற்றையும் எடுப்பித்தனர். நந்தவனங்கள் அமைத்தனர். இறைவனின் திருவமுது சாத்துப்படி முதலான பல்வேறு தேவைகளுக்கு நிலக்கொடை வழங்கினர். நந்தா விளக்குகளும் சந்தி விளக்குகளும் எரிக்க நிலம், மாடு, ஆடு ஆகியவற்றை மூலதனமாக்கினர். நிலங்களையும் சிற்றூர்களையும் தேவதானங்களாக விட்டனர். பொன்னையும் நெல்லையும் முதற்பொருளாகக் கொடுத்தனர். தமது நன்மையைக் கருதியும், உறவினர்களின் நன்மையைக் கருதியும் பல்வேறு வகையான தானங்கள் செய்தனர்.

மலையநாட்டு மக்கள் மலையமன்னர்களின் பல்வேறு பெயர்களை இட்டு வழங்கினர். கோயில், நந்தவனம், நிலம், ஊர், ஏரி, கலிங்கு, வாய்க்கால், வழி முதலானவைகளில் சில மலையமன்னர்களின் பெயர்களைக் காண்கிறோம்.

## முடிப்புரை

பாண்டியரின் ஆட்சிக் காலத்தில் இவர்களின் நிலை மிகவும் தாழ்ந்திருந்தது. பாண்டியர்களைத் தொடர்ந்து விசயநகரப் பேரரசு நிலவியபோது, புகழ்சான்ற இம்மலையர் குல மன்னர்களின் குடி மெல்ல மெல்ல மறையத் தொடங்கியது. கி.பி. 1360 முதல் மலையமான் நாடு விசய நகரப் பேரரசின் கீழ் வந்துவிட்டது. திருக்கோவலூர், நெற்குன்றம் ஆகிய ஊர்களில் கம்பன உடையார், அரிகரர் ஆகியோரின் கல்வெட்டுகள் காணப்பெறுகின்றன.[5] அக் காலத்தில் நாயக்கர்கள் உயர்மட்ட அலுவலர்களாக இருந் தமையால், மலையமன்னர்களுக்கு ஆட்சிப்பொறுப்பில் பங் கில்லாமல் போயிற்று. இதன் விளைவாக இவர்கள் சாதா ரணக் குடிமக்களின் நிலைக்குத் திகழ்ந்தனர்.

## உடையார்கள்

மலையநாட்டு எல்லைக்குள் குறிப்பாக திருக்கோவலூர் வட்டம், விருத்தாசலம், கள்ளக்குரிச்சி, திருவண்ணாமலை முதலான வட்டங்களின் சில பகுதிகள் ஆகியவற்றில் உடையார் என்னும் சாதியினர் பேரெண்ணிக்கையில் உள்ளனர். இவ்வுடையார்கள் மலையமான் எனவும், அக முடையார் எனவும், நத்தமர் எனவும், சுடர்மான் எனவும், பல பிரிவுகளாகக் கூறப்பெறுகின்றனர்.

இவர்களில் மலையமான் பிரிவைச் சேர்ந்த உடையார்கள், தம்மை மலைநாட்டை ஆண்ட அரசன் ஒருவனின் வழித் தோன்றல்கள் என்று கூறிக் கொள்கின்றனர். தம்முன்னோர் மலைநாட்டை ஆண்டமையால் தாம் மலையமான்கள் என்று அழைக்கப் பெறுவதாகவும் கூறுவர். இச் செவிவழிச் செய்திகள் வரலாற்றுக்கு ஏற்புடையதாகும்.

சகம் 1454 ஆவது [கி. பி. 1532] ஆண்டில் வரையப் பெற்ற அச்சுத தேவராயர் காலத்திய எலவானாசூர்ச்

சாசனம் ஒன்று, அவ்வச்சுத தேவராயர் துளுக்கர் படைகளையும் உடையார் படைகளையும் அழித்ததாகப் புகழ்ந்து பேசுகிறது. 7 ஆதலின், இவ்வுடையார்கள் முற்காலத்து மலைய மன்னர்களின் வழித்தோன்றல்களே என்பதில் ஐயமில்லை. இம்மன்னர்களில் சிலர் தம்மைப் 'பெரிய உடையான்' என்று அழைத்துக் கொண்டதும் இங்கு நினைவுறத் தக்கது.8

அகமுடையார் பிரிவைச் சேர்ந்த உடையார்கள். மலைய மன்னர்களிடம் படைத்தலைவர்களாக விளங்கியவர்கள். கல்வெட்டுகளில் இவர்கள் அகம்படன் என்று குறிக்கப்பெற்றனர்.

,'சித்தவடவன் அகம்படவனுன உத்தமசோழ மிலாடுடையான்''

என்று வரும் கல்வெட்டுத் தொடர் இங்கு உளங்கொளத் தக்கது.8

நத்தமர் பிரிவைச்சேர்ந்த உடையார்கள், மலையநாட்டுச் சமவெளிப் பகுதியில் வேளாண்மையை மேற்கொண்டு ஒழுகியவர்கள். சுடர்மான் பிரிவைச் சேர்ந்த உடையார்கள், சாத்திரங்கள் பல கற்று அறிவுத் துறையில் மேம்பட்டு விளங்குகின்றவர்கள். ஆங்கிலேயரின் ஆட்சிக்காலத்தில் உடையார்களை காவல் துறைக்குப் பெருவாரியாகப் பயன்படுத்திக் கொண்டனர்.9 ஆதலின், இன்றைய உடையார்கள் அன்றைய மலைய குலத்து மன்னர்களோடு தொடர்புடையவர்களே ஆவர்.

## குறிப்புகள்

1. A.R.E, 1913, No. 400
2. A.R.E, 1915, No. 288
3. A.R.E, 1907, No. 392
4. A.R.E, 1911, No. 222
6. A.R.E, 1934-35, Nos 255&216 and Tamil Country under Vijayanagar, p. 43- Dr. A. Krishnaswami
7. A.R.E, 1906, No. 175
8. வரலாற்று வடிவங்கள், க.எ.1-புலவர் சு. குப்புசாமி
9. Gazetter of Salem District [1967], p. 124.

# மலைய மன்னர்களைப் பற்றிய சில கல்வெட்டுகள்

## 1

இடம் : திருக்கோவலூர் வீரட்டானேஸ்வரர்க்கோயில்

அரசன் : முதலாம் பராந்தகச் சோழன்

ஆண்டு : 28[கி.பி. 935]

முன்பதிப்பு : (Epigraphia Indica, Vol. VII, Page. 141 (279/1902)

1 ஸ்வஸ்திஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேசரிபன்மர்க்கி யாண்டு 28 ஆவது மலாட்டு குறுக்கை

2 கூற்றத்து திருக்கோவலூர் திருவீரட்டானத்துப் பெருமாளுக்குஒரு நொந்தாவிளக்கு மிலாடுடையார்

3 கயிறூர்ப் பெருமானர் மகளார் ராஜதேவியார் தேசாதக்கி பெருமானர் வைத்தசாவா மூவாப்பேராடு நூ

4 று இவை பன்மாகேஸ்வர ரக்ஷை

## 2

இடம் : சித்தலிங்கமடம் — வியாக்கிர பாதேஸ்வரர்க் கோயில் அர்த்த மண்டபத்து வடக்குச் சுவர்

அரசன் : முதலாம் குலோத்துங்க சோழன்

ஆண்டு : 49 [கி.பி. 1119]

முன்பதிப்பு : இல்லை

குறிப்பு : கல்வெட்டின் முற்பகுதி பெரிதும் சிதைந்துள்ளது.

1 ஸ்வஸ்திஸ்ரீ புகழ் மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர்மகள் புணர உரிமையி

2 ற் சிறந்த மணிமுடி சூடி மீனவர் நிலைகெட வில்லவந் குலைதர ஏனை மன்னவர் இரியலுற்றிழிதர திக்கனைத்து

3 ம் தந்சக்கர நடாத்தி — — அருளு வீரசிம்ஹாஸநத்து உலகுடையாளொடும் வீற்றிரு

4 ந்தருளிய கோவிராஜகேஸரிபந்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு யாண்

5 டு 49 வது மலாடாந ஜநநாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்து பிரம்மதேயம் சிற்றின்கூர் சபையோம் உடை

6 யார் திருப்புலிப்பகவ தேவர்கு திருப்பள்ளி எழுச்சிக்கு திருமஞ்சணக் குடம் பத்துக்கும்சாத்தியருளத் திருமாலை

7 ...திரு...அமுது நெய்யமுது... தயிரமுது...

8 உரிக்கும் அடைக்காயமுது பாக்கு நாலுக்கு[ம்] வெற்றிலையமுது பத்துக்கும் இச்சந்திக்கு சந்தி விளக்கு எட்டுக்கும்

9 ...துவது நீங்கலுமாக திருமுனைப்பாடி தாமர் நாட்டு கிளியூர் பூவன்மருந்தன்நான ஆழ்வானங்க கார மலை

10 யமான் இறையிலி தேவதாநமாக கொண்டு விட்ட நிலம் பதிநாலடிக் கோலால் குழி ஆயிரத்து நா

11 றைம்பதுக்கும் கீழ்பாற்கெல்லை புரத்துங்கமா மேல்வாய் புகும் திருச்சிற்றம்பல வாய்க்காலுக்கு மேற்கும்

12 தன்பாற்கெல்லை திருச்சிற்றம்பல வாய்க்காலுக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை எருகம் போகிக்கு நீர் பாய்ந்த

13 வாய்க்காலுக்கும் மருதூரெல்லைக்கு கிழக்கும் வட பாற் கெல்லை எருகம் போகிக்கு நீர் பாய்ந்த வாய்க்காலுக்கு

14 தெற்கும் ஆக இந்த நாற்பாற் பேரெல்லையுள் அகப் பட்ட நிலமும் திருச்சிற்றம்பல வாய்க்காலுக்குத் தெற்கு விட்ட நி

15 லத்துக்கு கீழ்பாற்கெல்லை முடக்குக் கழுவ [ா]ய் காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை மதுராந்தக வாய்க்காலுக்கு வட

16 க்கும் மேல்பாற்கெல்லை திருச்சிற்றம்பல வாய்க்கா லுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இத் திருச்சிற் றம்பல வாய்

17 க்காலுக்கு தெற்கும் ஆக இன்ந்த நாற்பேரெல் லையுள் அகப்பட்ட நிலத்தி[ல்] ஈஸ்வரக் கோல் பாரும் பூத்துடை

18 க்குண்டிலும் உள்நிலம் நீக்கி உள்நிலமொழிவின் றிக் குழி ஆயிரத்தறு நாற்றைம்பதுக்கு விலையா வனமாக

19 காசு பதிநேழும் கைக்கொண்டு இறையிலி தேவ தாநமாக விட்டோம் ஸபையோம் இது பந்மா ஹேஸ்வர ரக்ஷை.

# 3

இடம் : திருக்கோவலூர் — திருவிக்கிரமப் பெருமாள் கோயில், இரண்டாம் பிரகாரம், தெற்குச் சுவர்.

அரசன் : இரண்டாம் இராசராச சோழன்

ஆண்டு : 2 [கி.பி. 1148]

முன்பதிப்பு : இல்லை [318 of 1921]

குறிப்பு : சில இடங்கள் சிதைந்துள்ளன.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜ ராஜ தேவற்கு யாண்டு 2வது திருக்கோவலூரான ஸ்ரீமதுராந்கச் சதுர்வேதி மங்கலத்து திருவிடை கழி எம்பெருமானுக்கு

2 கிளியூர் மலையமா[ன்] இரையூரனுன ராஜராஜச் சேதியராயனேன் உத்தராயனத்து நாள் திருவடித் தொழுது எங்கள் தவப்பநாற்கும் எநகும் நன்ருக வைத்த கீழை திருநந்தா வி

3 ளக்கு 4கு விட்ட நிலமாவது இவ்வெம்பெருமாந் பழந்திருவிடையாட்டம் மேல்கழநியில் மதிவல்லன் திருநந்தவனத் துக்கு கிழக்கு நித்தவினேதன் வா[ய்]க்காலுக்கு வடக்கு கீழை

4 ப்பூச...கு....கோலுகு மேற்கு ஆற்றங்கரையின் மடப்புறத்துக்கு தெற்கும் தடி 3ல் குழி 870ம் கல்லனுக்கு தெற்கு திருமழிசைதடி தடிக்குழி 100ம் இதன் கிழக்குக் குழி 300ம் கற்றுகாவுக்கு மேற்

5 கு தடி 1 குழி 500ம் பேட்டுக்குக் கிழக்கு குழி செய் தடி 1 குழி 300ம் மங்கலக்கேணிக்கு மேற்கு குண்டில் குழி 60ம் ஆக குழி 2130வும் சிறுபாடி காவல் உள்ளிட்ட அனைத்தாயங்

6 களும் இழந்து இந்நிலம் திருவடிப் பிடிப்பாரே கைக் கொண்டு உழுநும் விளக்கெரிப்பதாக இறை யிலி திருநந்தா விளக்குப் புறமாக கல்வெட்டி விட்டேன் ராஜராஜச் சேதியரானேன்.



# 4

இடம் : ஷை கோயில், ஷை சுவர்

அரசன் : இரண்டாம் இராசராச சோழன்

ஆண்டு : 14 [கி.பி. 1160]

முன் பதிப்பு : இல்லை

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனசக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜ
தேவற்கு யாண்டு 14 ஆவது ராஜராஜவளநாட்டு
மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவ
லூரான ஸ்ரீமதுராந்தகச்

2 சதுப்பேதி மங்கலத்து திருவிடைக்கழி எம்பெருமா
னுக்கு திருப்பள்ளித்தாமம் ஆக்குகைக்கு கிளியூர்
மலையமாங் பெரியுடை யாங் இரையூரநாந இராசராசச்
சேதியராயங்

3 இவ்வூர் ஸபையார் பக்கல் விலைக்குக் கொண்டு திரு
விடையாட்ட மாக விட்ட நன்சை நிலமாவது...
இந்நிலம் முக்காலும் எந் பேரால் ஸற்றுங்
குடாதாங்

4 திருநந்தவந மெந்று திருப்பள்ளித்தாமமும் தெங்கும்
வைத்து ஆக்கக் கடவதாகவும் இந்நிலத்துக்கு
இறையும் பெரும்பாடி காவலுள்ளிட்ட ஆயங்களுங்

5 கொள்ளக் கடவதல்லாதுதாக விட்டேந் திருவிடை
கழி எம்பெருமாநுக்கு ராஜராஜச்சேதியராயனேந்

# 5

இடம் : ஷெ. கோயில் — இரண்டாம் பிரகார.
வடக்குச் சுவர் குமுதப்படை.

அரசன் : இரண்டாம் இராசாதிராச சோழன்

ஆண்டு : 5 [கி.பி. 1168]

முன்பதிப்பு : இல்லை [322 of 1921]

1 திரிபுவனசக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜாதிராஜ தேவற்கு யாண்டு 5 ஆவது ராஜ [ராஜ]வள நாட்டு மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக் கோவலூரான ஸ்ரீ மதுராந்தக சருப்பேதி மங்க லத்துத் திருவிடைகழி எம்பெருமானுக்கு

2 கிளியூர் மலையமான் அத்திமல்லன் சொக்கப் பெரு மாளாந ராஜகம்பீரச் சேதியராயநேன் இவ்வூர் ஸபையார் பக்கல் பொன் நிட்டுக் கொண்டுவிட்ட நிலமாவது... இந்நிலமிரண்டு வேலியும் கொண்டு ...திருவிடை யாட்டமாக சந்திராதித்தவற் செல்ல விட்டேன் திருவிடைகழி எம்பெருமா னுக்கு ராசகம்பீர சேதியராயனேன் இது ஸ்ரீவயிஷ் ணவ ரக்ஷை.

# 6

இடம் : ஷை கோயில் — இரண்டாம் பிரகாரம், வடக்குச் சுவர்.

அரசன் : இரண்டாம் இராசாதிராச சோழன்

ஆண்டு : 7 [கி.பி. 1170]

முன்பதிப்பு : இல்லை [311 of 1921]

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜாதி ராஜதேவற்கு யாண்டு 7வது ராஜராஜ வள நாட்டு மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக் கோவலூரான ஸ்ரீ மதுராந்தகச் சதுர்வேதி மங்க லத்துத் திரு விடைக்கழி எம்

2 பெருமானுக்கு இவ்வாண்டைக் கன்னி நாயற்று இருபத்தஞ்சாந் தியதியான வியாழக் கிழமை பெற்ற சோதி நாள் கிளியூர் மலையமாங் பெரிய உடையாங் இறையூரநாந இராஜராஜச்சேதியராயநேங் இவ்வூர் ஸபையார் பக்கல்

3 நாந் பொந்நிட்டு விலை கொண்டு திருவிடையாட்ட மாக இறையிலி செய்துவிட்ட நிலத்துக்குக் கீழ் பாற்கெல்லையூர் நத்தத்துக்கு மேற்கும் தெந்பாற் கெல்லை யேரிகரைக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை அத்திமல்லன் சொக்கப் பெருமாளா

4 ந ராஜகெம்பீரச்சேதியராயங் இவ்வூர் சபையார் பக்கல் பொந்நிட்டுக் கொண்டு திருவிடையாட்ட மாக இறையிலி செய்து விட்ட நிலம் இரண்டு வேலிக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை நித்தவிநோ தந் வாக்காலுக்குத் தெற்கும் இந்நா

5 ந்கெல்லையிலு முள்பட நில மிகுதிக் குறைவு உள்ள டங்க நிலமுந்று வேலியும் மூந்றுமா இந்நில மூந்றே மூந்றுமாவும் திருவிடைக்கழி எம்பெருமாந் கோயி லில் பெருமானுக்கு அமுதுபடி சந்திராதித்தவற் செல்லவிட்டேன் இவ்வூர் நத்தத்தில் நான் இஸபை யார் பக்கல்

6 கொண்டுவிட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை அம்ப லத்து கீழைத் தெருவுக்கு மேற்கு தென்பாற் கெல்லை தெற்கில் தெருவுக்கு வடக்கும் மேல்பாற் கெல்லை விளை நிலத்துக்கு கிழக்கும் வடபாற் கெல்லை திருவிடையா

7 ட்டம் வெண்ணைக்கூத்த விளாகத்துக்கு விஷ்ணு மாணிக்கங்கள் மனைக்கு தெற்கும் இஸபையார் பக்கல் கொண்டு விட்ட திருநந்தவனத்துக்கு கீ(ழ்) பாற்கெல்லை ஆற்றுக்குப் போன திருவிடைக் கழியார்

8 வதிக்கு மேற்கும் தென்பாற்கெல்லை சற்றுகுடாதாங் வாய்க்காலுக்கு தெற்கும்[1] மேல்பாற் கெல்லை பொன்னம்பலக் கூத்தனுக்கு கிழக்கும் வடபாற் கெல்லை ந்ரஸிங்கபன்ம திருநந்தவனத்து

9 க்கு தெற்கும் இந்நான்கெல்லைகளுக்கு உட்பட்ட திருநந்த வநமும் நத்தமும் விளை நிலமும் திரு விடை கழி எம்பெருமானுக்குச் சந்திராதித்தவற் செல்லவிட்டேன் கிளியூர் மலையமான் பெரிய உடை யாளு

10 ன இறையூருன ரரஜராஜச் சேதியராயனேன் இத்தன் மம் அழிவு செய்வான் வல்லவரையன் சத்தியம்

# 7

இடம் : ஷை கோயில்—இரண்டாம் பிரகாரம்,
தெற்குச் சுவர்.

அரசன் : மூன்றும் குலோத்துங்க சோழன்

ஆண்டு : 5 (கி.பி. 1183)

முன்பதிப்பு : இல்லை [341 of 1921]

1 ஸ்வஸ்திஸ்ரீ புயல் வாய்ப வள[ம்]பெருக பொய்யாத நான் மறையின் செயல் வாய்ப்ப திருமகளுஞ் செய மகளுஞ் சிறந்து வாழ வெண்மதி பொற்குடை விளங்க வெல் வேந்தரடி வணங்க மண் மடந் களப்ப மனுநீதி தழைக்க...சக்கரமுங் கோலும் திக்கனைத்து செயல் நடப்ப

2 கற்பகதாற் புவனகாப்ப பொற்பமைந்த முடி புனைந்து செம்பொன் வீரஸிம் ஹாஸநத்து புவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோப்பர கேசரி பந்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழ தேவற்கு யாண்டு 5ஆவது கற்கடக நாயற்று பூர்வபக்ஷ

3 த்து திதியையும் திங்கட்கிழமையும்பெற்ற மக(த்)து நாள் ராஜராஜ வளநாட்டு மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூரான ஸ்ரீமதுராந்தகச் சதுப்பேதி மங்கலத்துத் திருவிடை கழி எம்பெரு மான் கோயிலில் சித்திரமேழி மடத்திலே யிரண்டு திருநாளும் சிறப்

4 பெழுந்தருளும் நாட்களும் சேவிக்க வந்த ஸ்ரீவைஷி ஷ்ணவர்களுக்குச் சோறு இடக் கடவதாக பெரிய நாட்டாற்குச் சிறப்பாகராஜராஜச் சேதியராயனும்

ராஜராஜக் கோவல ராயனும் வூற் ஸபையாரி யக்[க]ல் கொண்டு இவ்வூற் கீழ்வாய் புல[த்]துக் கொண்டு காப்பு திரு(த்)தி

5 விட்ட நிலம் ஒரு வேலிக்குக் கீழ்பாற்கெல்லே சிற்றேரி நீர்கோவைக்கு மேற்கும் தென்பாற் கெல்லே நடுவிற் போயகரைக்கு வடக்கும் மேல் பாற்கெல்லே ஊறுகாலுக்கும் இவ்வாழ்வார் திரு விடையாட்டம் திட்டிட்டு வென்ற விளாகத்துக்குக் கிழக்கும் வடபாற்கெல்லே தொட்டி தூம்புக்கும் ஏரி கரைகுந்

6 தெற்கும் இப்பெரு நான்கெல்லேக்கு உட்பட்ட தடி பலவினல் மிகுதிக் குறையுளப்பட நிலம் ஒரு வேலிக் கும் நாங்கள் கொள்ளும் சிறுபாடி காவல் நக்கக் கடமையும் மரமஞ்சாடியும் பெரும்பாடி காவலு முள்ளிட்ட ஆயங்கள் இ மடத்துக்குச் சோறிடப் பெரிய நாட்டாற்குச் சிறபாக விட்டோம் ராஜ ராஜச் சேதியராயனும் ராஜராஜ கோ

7 வலராயனு மிவ்வோம் உ இது ஸ்ரீவைஷ்ணவர் ரக்ஷை.

# 8

இடம் : ஷி கோயில் — ஷி இடம்

அரசன் : மூன்றும் குலோத்துங்க சோழன்

ஆண்டு : 5 [கி.பி. 1183]

முன் பதிப்பு : இல்லை (345 of 1921)

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவந சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத் துங்க சோழ தேவற்கு யாண்டு 5 ஆவது ராஜராஜ வளநாட்டு மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக் கோவலூரான ஸ்ரீமதுராந்தகச் சருப்பேதி மங்கலத் துத் திருவிடை கழி எ

2 ம் பெருமானுக்கு இந்நாட்டுக் கிளியூர் மலையமான் காமன்மலையன் சேதியராயனுன முடிகொண்டசோழ மலையகுலராயனேன் திருவிடையாட்டமாக விட்ட நிலமாவது இந்நாட்டுச் சோமாசி கீரநூரில் பொருந்த மூலை யென்

3 று பேருடைய தடி பலவினுல் மிகுதிக்குறை வுன் ளடங்க விட்ட நிலமொரு வேலிக்குக் கீழ்பாகெல்லை இவ்வாழ்வார் பழந் திருவிடையாட்டம் வீறபட் டிக்கும் ஏரி கரைக்கு மேற்கும் தென்பாற்கெல்லை நாகதலை வாய்(க்)கு வடக்கும் மேற்பாற் கெல்

4 லை கீழை நாரை கல்லுக்குக் கிழக்கும் வடபாற் கெல்லை பனப்புறம் கோதை விளாகத்துக்குத் தெற் கும் உட்பட்ட நிலம் ஒரு வேலியும் இந்நிலத்தால் வந்த கடமையும் மரமஞ்சாடியும் பெரும்பாடிக் காவலுள்ளிட்ட ஆயங்களு மகப்படக் கொண்டு

5 இக் கோயிலில் திருப்பூமண்டபமுந் திருக்காக்கள்ளி யும் கல்லாலே செயவும் பின்புமித் திருப்பூமண்டப முள்ளிட்ட பணி செய்வாற்கு நிமந்தமாகவும் சந்திராதித்தவற் செல்ல விட்டேன் காமன் மலையன் சேதியராயனுன முடிகொண்ட சோழ மலைய குல ராயனேன் இத்தன்மத்துக்கு யழிவு செய்வா

6 ன் வல்லவரயன் சத்தியம் உ.

குறிப்புகள்

1. வடக்கும்—என்று இருத்தல் வேண்டும்.



# மலைய மன்னர்களின்
# கொடைபெற்ற கோயில்கள் : 39
## ஊர்கள் : 29

| | |
|---|---|
| அறையணிநல்லூர் | ஒப்பொருவருமில்லா நாயனார்க் கோயில் |
| ஆமூர் | அகத்தீச்சுரம் |
| ஆறகளூர் | கரிவரதராசப்பெருமாள்கோயில் [இராசராச விண்ணகர்] |
| எலவானாசூர் | இராசநாராயண விண்ணகர் |
| ,, | ஊர்பாகங்கொண்டருளிய நாயனார்க் கோயில் |
| ,, | திருச்சக்கரத்தாழ்வார்க்கோயில் |
| ,, | திருமுற்றத்தாழ்வார்க் கோயில் |
| ,, | திருமேற் கோயிலாழ்வார்க் கோயில் |
| ,, | வானவன்மாதேவி விண்ணகர் |
| ,, | ஸ்ரீபதியாழ்வார்க் கோயில் |
| குகையூர் | பொன்பரப்பினஈச்சரம் |
| சண்பை | தான்தோன்றிச்சரம் |
| ,, | வைரீச்சுரம் |
| சித்தலிங்கமடம் | திருப்புலிப் பகவ நாயனார்க் கோயில் |
| செங்கண்மா | இடபத்துறையுடைய நாயனார்க் கோயில் |
| சோழவாண்டிபுரம் | சமணக்கோயில் |
| திருக்காளத்தி | காளத்தீச்சுரம் |
| திருக்கோவலூர் | இடைக்கழி ஆழ்வார்க் கோயில் |
| ,, | ஆகாரசூர விண்ணகர் |
| ,, | குகனீச்சரம் |
| ,, | வீரட்டானேச்சுரம் |

| | |
|---|---|
| திருநறுங்கொண்டை | மேலை, கீழைப்பள்ளிகள் |
| திருநாவலூர் | தொண்டீச்சரம் |
| திருப்பழனம் | ஆபத்சகாயேச்சுரம் |
| திருப்பாலைப்பந்தல் | திருநாகேச்சுரம் |
| திருமலை | சந்திரபிரபுசாமி கோயில் [சமணக் கோயில்] |
| திருமால்புரம் | மணிகண்டேச்சுரம் [உத்தமசோழீச்சுரம்] |
| திருவகத்தீஸ்வரம் | மிலாடுடையார் பள்ளி |
| திருவண்ணாமலை | அருணாசலேச்சுரம் |
| திருவாமாத்தூர் | அபிராமேச்சுரம் |
| திருவெண்ணெய நல்லூர் | திருவருள் துறை |
| தொழுதூர் | மதுராந்தகச் சோழீச்சுரம் |
| நெய்வனை | பொற்குடம் கொண்டருளிய நாயனார்க் கோயில் |
| புதுப்பேரூர் | உத்தரீச்சுரம் |
| பெரும்புனம் | தான்தோன்றீச்சுரம் |
| மணலூர்ப்பேட்டை | காக்கா நாச்சியார்க் கோயில் |
| மருத்துவக்குடி | சேதிகுல மாணிக்கப் பெரும் பள்ளி |
| மாரங்கியூர் | இராமலிங்கேச்சுரம் |
| விக்கிரவாண்டி | சேதிகுல சிந்தாமணீச்சுரம் |

# மேற்கோள் நூல்கள்

தமிழ்


1. அகநானூறு
2. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் — திரு. வி. கனகசபை
3. ஆராய்ச்சி — காலாண்டிதழ்
4. இந்தியப் பண்பாடும் தமிழரும் —திரு. எஸ். இராம கிருஷ்ணன்.
5. உ.வே.சா. நூலகச் சுவடிகள்
6. கல்வெட்டுக் கருத்தரங்கு — டாக்டர் இரா. நாகசாமி
7. கல்வெட்டுகளால் அறியப்பெறும் உண்மைகள் — வித்துவான் திரு. தி.வை. சதாசிவபண்டாரத்தார்.
8. கல்லும் சொல்லும் — டாக்டர் இரா. நாகசாமி
9. களப்பிரர் ஆட்சியில் தமிழகம் — திரு. மயிலை.சீனி. வேங்கடசாமி
10. குறுந்தொகை
11. கொங்கு நாட்டு வரலாறு — திரு. கோ.ம. இராமச் சந்திரஞ் செட்டியார்
12. கொங்குநாட்டு வரலாறு — திரு மயிலை. சீனி. வேங்கடசாமி
13. சாசனத் தமிழ்க்கவி சரிதம் — திரு மு. இராக வையங்கார்.
14. சிறுபாணாற்றுப்படை — நல்லூர் நத்தத்தனார்
15. செங்கம் நடுகற்கள் — டாக்டர் இரா. நாகசாமி
16. தமிழ் இலக்கிய வரலாறு — திரு மு. அருணாசலம் M.A
17. தமிழ் நாவலர் சரிதை
18. தமிழக வரலாறு — டாக்டர் மா. இராசமாணிக்கனார்
19. திருத்தொண்டர் திருவந்தாதி — நம்பியாண்டார்நம்பி
20. திருவிசைப்பா — சேதிராயர்
21. தென்னிந்திய கோயிற் சாசனங்கள்
22. தேவாரம் — திருஞானசம்பந்தர்

23 ,, — திருநாவுக்கரசர்
24 ,, —சுந்தரமூர்த்தி சுவாமிகள்
25 தொண்டைமண்டல சதகம்
26 தொல்காப்பியம் —தொல்காப்பியர்
27 நற்றிணை
28 நன்னூல் — பவணந்தி முனிவர், பழைய உரைகள்.
29 நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்—ஆழ்வார்கள்
30 பதிற்றுப் பத்து
31 பன்னிருதிருமுறை வரலாறு—வித்துவான்
திரு க. வெள்ளைவாரணனார்
32 பாண்டியர் செப்பேடுகள் பத்து
33 பாரதம்—வில்லிப்புத்தூராழ்வார்
34 பிற்காலச் சோழர் சரித்திரம்—பாகம் I & II—
வித்துவான் திரு தி. வை. சதாசிவபண்டாரத்தார்.
35 புறநானூறு
36 பெரியபுராண ஆராய்ச்சி – டாக்டர் மா. இராசமாணிக்கனார்.
37 பெரிய புராணம்—சேக்கிழார்
38 மதுரைக் காஞ்சி—மாங்குடி மருதனார்
39 முத்தரையர்—திரு நடன. காசிநாதன் M.A.
40 முதலாம் இராசராச சோழன்—திரு. க.த. திருநாவுக்கரசு
41 முதலாம் இராசேந்திர சோழன்—
திரு ம. இராச சேகர தங்கமணி
42 யாவரும் கேளிர்—டாக்டர் இரா. நாகசாமி
43 வரலாற்று வடிவங்கள்—புலவர் சு. குப்புசாமி
44 விக்கிரம சோழன் உலா—ஒட்டக்கூத்தர்
45 வேளிர் வரலாறு—திரு மு. இராகவையங்கார்

ஆங்கிலம்

46 A History of South India- Prof K.A. Neelakanda
Sastri
47 Annual Reports on Indian Epigraphy.

48 Annual Reports on South Indian Epigraphy
49 Chieftains of Maladu- Dr. K.V. Raman
50 Eastern Calukyas–Dr. N. Venkataramanayya
51 Epigraphia Indica, Vols
52 Ghzetteer of Salem District—Dr. A. Ramaswami
53 Gazetter of South Arcot District—Dr. B.S. Baliga
54 Mackenzie's Colle ctions
55 Political Geography of the Chola Country—
Y. Subbarayalu M.A., M: Litt
56 Revue Historique de Pondicherry.
57 South Indian Inscriptions, Vols
58 The Colas–Prof. K.A. Neelakanda Sastri.
59 The History of the Tamil—P.T. Srinivasa Ayangar.
60 The Hoysalas—J.D.M. Derrett
61 The Role of Feudatories in Pallav a History—
M.S. Govindasamy
62 The Surnames of the Cankam Age Literary and
Tribal–M.A: Dorai Rangaswamy
63 The Tamii Country Under Vijayanagar—
Dr. A. Krishnaswymi
64 Tirupati Devasthanam Epigraphical Report—Sathu-
Subrahmanya Sastri B.A.,
65 Topograplical list of the inscriptions of the Madras—
Presidency—V. Rangacharya M.A., L.T.,

## அருஞ்சொல் அடைவு

